# கல்கி பொருளடக்கம்

மலர் 12 இதழ் 31 | 1953 மார்ச் 1 | நந்தன ஆ மாசி 18உ

முற்றிலும்
மாறுபட்ட கதை..
சிலேடைச்
சித்திரம்.........
நாகரீகமான
பொழுது போக்கு.

என்று வடஇந்தியப்
பத்திரிகைகளால் புகழப்பட்ட

**ஜெமினியின்**
மிஸ்டர்
# சம்பத்
ஹிந்தி

பிப்ரவரி 28உ முதல்
சென்னை
வெலிங்டனில்

தினசரி 3 காட்சிகள் - 3, 6-15, 9-30





மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார். | இதழ் 31

# ஜனாதிபதி விஜயம்

ஒரு சமயம் விசித்திரமான ஒத்துழையாமைப் போராட்டம் நடந்தது.

தேகத்தில் உள்ள உறுப்புக்கள் ஒவ்வொன்றும் தான் தான் பெரியவன் என்று கர்வம் கொண்டன. ஒன்றுக்கொன்று ஒத்துழைக்க மறுத்தன. தம் தம் கடமையைச் செய்யாமல் வாளாவிருந்தன.

கைகள், தாங்கள் வேலை செய்யாவிடில் மற்ற உறுப்புக்கள் உணவின்றி மெலிந்து போக நேரும் என்று மார் தட்டின.

கால்களோவெனில், தாங்கள் குறிப்பிட்ட இடத்துக்கு நடந்து சென்றால்தானே கைகள் வேலை செய்ய முடியும் என்று கூறின.

"நாங்கள் இல்லாவிட்டால் கால்கள் எங்கு போக முடியும்? கைகள் எப்படி வேலைசெய்ய முடியும்?" — இவ்விதம் கண்கள் கேட்டன.

இறுதியில் எல்லா உறுப்புக்களும் பரஸ்பரம் ஒத்துழைக்க மறுத்ததால் உணவின்றி உடல் நலியத் தொடங்கியது.

அதன் விளைவாகக் கண்கள் பஞ்சடைந்தன; கைகள் சோர்ந்து விழுந்தன; கால்கள் துவண்டு விட்டன.

அதன் பிறகுதான் அவை ஒவ்வொன்றும் மற்ற உறுப்புக்களின் ஒத்துழைப்பின்றித் தாங்கள் தனியாக எதுவும் செய்ய முடியாது என்பதை உணர்ந்து கொண்டன.

இவ்விதமாக, வாழ்க்கைத் தத்துவம் அடங்கிய ஒரு கதை சொல்லுவது உண்டு.

அதைப் போலவே தேசமாகிற உடலுக்கு மாகாணங்கள் உறுப்புக்கள் போன்றவை.

அவைகள் பரஸ்பரம் ஒத்துழைத்துத் தம் கடமையைச் செய்தாலன்றி, தேசம் சுபிட்சமாக இருக்க முடியாது. சுபிட்சமற்ற தேசத்தில் தனி ஒரு மாகாணம் மாத்திரம் சந்தோஷமாக இருப்பது என்பது முடியாத காரியம்.

தேசத்தின் சுக துக்கங்களையும் லாப நஷ்டங்களையும் ஓரளவு ஒவ்வொரு மாகாணமும் பகிர்ந்து கொள்ளத்தான் வேண்டும்.

சென்ற சில தினங்களாகத் தென்னிந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்த இந்தியா ஜனாதிபதி பாபு ராஜேந்திரப் பிரசாத் இவ்விஷயத்தை வற்புறுத்தினார்.

சுதந்திரம் பெறுவதற்காக அன்னிய ஆட்சியுடன் ஒத்துழைக்க மறுத்த பாரத நாட்டு மக்கள், சுதந்திரம் பெற்றபின் தங்களுக்குள்ளேயே பரஸ்பரம் ஒத்துழைக்க மறுப்பது தேசத்தைப் பலவீனப்படுத்துவதாக முடியும் என்று குறிப்பிட்டார்.

காந்திய வழிக்கும் சாத்விகத் தன்மைக்கும் உதாரண புருஷராக விளங்கிவரும் ஜனாதிபதி ராஜேந்திரப் பிரசாத், தமிழ் நாட்டுக்கே பெருமையைக் கொடுக்கும் ராமேசுவரம், மதுரை, ஸ்ரீரங்கம், சிதம்பரம், திருப்பதி முதலிய பல புனித ஸ்தலங்களுக்கும் சென்று சுவாமி தரிசனம் செய்தார்.

சாதாரணமாக, மற்ற மாகாணங்களுக்கு விஜயம் செய்யும் பிரமுகர்கள் அங்கங்கேயுள்ள நகரங்களைச் சுற்றிப் பார்ப்பார்கள்; பிரசங்கங்கள் செய்வார்கள்; சிற்றுண்டி அருந்துவார்கள். ஆனால் தெய்வ பக்தியுள்ள நமது ஜனாதிபதியின் ஹிருதயத்தைக் கவரும் சிற்பச் சிறப்பு வாய்ந்த புனித ஆலயங்கள் நம் செந்தமிழ் நாட்டிலேதான் இருக்கின்றன. வடநாட்டிலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் விஜயம் செய்யும் பிரமுகர்கள் அனைவரும் நம் புராதன ஆலயங்களைத் தரிசித்து அதிசயம் அடைகிறார்கள். இது தமிழ்நாட்டின் தனிப்பெரும் பாக்கியமே ஆகும்.

நமது ஜனாதிபதி சென்னைமா நகருக்கு விஜயம் செய்தபோது மகோன்னதமான அப் பதவிக்கு உகந்த ராஜோபசாரங்களுடன் அவர் வரவேற்கப்பட்டார். லட்சக்கணக்கான பொது மக்கள் கூடி அவரைத் தரிசித்து மரியாதை செய்தனர்.

"பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துப் பாரத நாடு சுதந்திரப் போர் தொடுத்தபோது, நம்மைப் பல கஷ்டங்கள் சூழ்ந்து கொண்டன. மேற்படி கஷ்டங்களைச் சமாளித்து வெற்றி பெற முடியுமா என்று தேச மக்கள் கலங்கினர். ஆனால், அவ்விதம் வெற்றி பெறும் வழியைத் தேச பிதாவான காந்தி மகான் மக்களுக்குக் காட்டினார்.

"இப்போது பாரத நாட்டு மக்களை மற்றொரு விதமான கஷ்டங்கள் சூழ்ந்து கொண்டிருக்கின்றன. மேற்படி கஷ்டங்களுக்கு நாம் அன்னியர் எவர்மீதும் குறை கூறுவதற்கில்லை. அக் கஷ்டங்களுக்குப் பெரிதும் நம்முடைய தவறுகளே காரணம். முன்போல் நாம் மேலும் காந்திய வழியையே உறுதியுடன் பின்பற்றுவோமாயின் நம்மைச் சூழ்ந்துள்ள கஷ்டங்களைச் சமாளிப்பதில் வெற்றி பெறலாம்."

சென்னை கார்ப்பொரேஷன் ஸ்டேடியத்தில் நடந்த பிரம்மாண்டமான கூட்டத்தில் நமது ஜனாதிபதி அவ்விதம் குறிப்பிட்டார்.

மாகாணப் பிரிவினை தேசத்தின் ஒற்றுமையைக் குலைத்து, துவேஷத்தை வளர்ப்பதாக இருக்கக் கூடாது என்றும் பாபு ராஜேந்திரர் கூறினார்.

முக்கியமாக, ஆந்திர மாகாணப் பிரிவினை சம்பந்தமாகத் துவேஷத் தீயை மூட்டி வரும் ஆந்திரப் பிரமுகர்கள் நமது ஜனாதிபதியின் உபதேசத்தைப் பின்பற்றித் தங்கள் போக்கை மாற்றிக் கொள்ள முற்படுவார்களாக!

# வசதிகள் பெருகுகின்றன

இந்தியாவில் ஏழைகளின் பஞ்ச நிலைமையை உலகத்துக்குப் பிரகடனம் செய்வதற்காக மகாத்மா காந்தி ஒரு முழத் துண்டை மாத்திரமே அணிவதென்று பிரதிக்ஞை செய்தார். அது போலவே மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளின் துயரத்தைச் சகிக்க முடியாமல் மூன்றாவது வகுப்பு வண்டிகளில் பிரயாணம் செய்யலானார். மேற்படி வண்டிகள் அன்னிய ஆட்சியின் அநாகரிகமான நிர்வாகத்துக்கு எடுத்துக் காட்டாக விளங்கி வந்தன.

ஆனால் அவையெல்லாம் இன்று பழங் கதைகளாகி விட்டன. அன்னியர் ஆட்சியில் நூறு வருஷங்களாக அடைய முடியாத வசதிகளைச் சென்ற மூன்று நாலு ஆண்டுகளில் மூன்றாவது

வழங்கப் போவதாக ரயில்வே மந்திரி அறிவித்துள்ளார். இவ்வாறாக, எதிர்காலத்தில் ரயில் பிரயாணிகளின் வசதிகள் இன்னும் அதிகமாகும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

* *

1952—53-ம் வருஷ வரவு செலவுத் திட்டத்தின்படி செலவு போக இருபத்து மூன்றரைக் கோடி ரூபாய் மிச்சம் ஏற்படும் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் இப்போது திருத்தப்பட்டுள்ள திட்டத்தின்படி ஒன்பதரைக் கோடி ரூபாய்தான் மிச்சம் கிடைத்திருக்கிறது. அதாவது எதிர்பார்த்த வருமானத்தில் பதினாலு கோடி

எனவே, இனி வெளி நாடுகளிலிருந்து அரிசி இறக்குமதி செய்ய வேண்டிய அவசியமே இல்லை."

இந்தியா உணவு மந்திரி ஸ்ரீ ரபீ அகமது கித்வாய் மேற்படி சந்தோஷச் செய்தியைப் பார்லிமெண்டில் வெளியிட்டார்.

ஒரிசா மாகாணத்தில் ஏராளமான அரிசி எடுப்பாரின்றித் தேங்கிக் கிடக்கிறதாம். ஏற்கெனவே செய்துள்ள ஏற்பாட்டின்படி, அங்கிருந்து அரிசியை எடுத்துக் கொண்டு போக வேண்டிய மாகாணங்கள் அதை எடுத்துச் செல்லவில்லை. பல மாகாணங்களிலும் அரிசி உற்பத்தி திருப்திகரமாக இருப்பதே அத்தகைய நிலைமைக்குக் காரணம். எனவே, தங்களிடம் தேங்கிக் கிடக்கும் அரிசியைச் சீக்கிரமாக எடுத்துச் செல்லும்படி ஒரிசா சர்க்கார் இந்திய சர்க்காரையும் மாகாண சர்க்கார்களையும் கெஞ்சும்படியான நிலைமை உண்டாகியிருப்பது மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடிய விஷயம் அல்லவா!

தேசம் முழுதும் சுபிட்சமாக இருப்பதற்கு விதி விலக்காக நமது சென்னை மாகாணத்தில் ஒரு பகுதி இருப்பது வருந்தத் தக்கது. மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களில் இவ் வருஷம் மழை இல்லாமற் போனபடியால் மக்கள் ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். அங்கேயும் கஞ்சி நிலையங்கள் ஏற்படுத்தி மக்களைக் காப்பாற்ற வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது.

எனினும், மற்ற மாகாணங்களில் நிலைமை சுபிட்சமாக இருப்பதால், அங்கிருந்து சென்னை மாகாணத்துக்குத் தேவையான அரிசியை இந்திய சர்க்கார் அனுப்பத் தயாராக இருக்கிறார்கள். இதை நம் ஜனாதிபதியும் தமது பிரசங்கம் ஒன்றில் குறிப்பிட்டார். எனவே, இம் மாகாணத்தில் பஞ்சம் ஏற்படும் என்ற பீதிக்கு இனி இடமில்லை.

அட்டைப்பட விளக்கம்

# பெண் குலத்தின் வெற்றி

ஒரு சமயம் தென்னாட்டில் இணையில்லாத புகழ் பெற்றிருந்த கன்னையா நாடகக் கம்பெனியைக் குறித்து நேயர்கள் பலருக்கு நினைவிருக்கலாம். கிருஷ்ண லீலா, தசாவதாரம் முதலிய நாடகங்களின் மூலம் தமிழ் மக்களின் உள்ளங்களை அக் கம்பெனி கொள்ளை கொண்டது. ஸ்ரீரங்கம், திருப்பதி முதலிய புண்ணிய ஸ்தலங்களுக்கு ஸ்ரீ கன்னையா பெரும் போட்டியா யிருந்தார். அரங்க மேடையில் ஸ்ரீ கன்னையா ஸ்ரீரங்கத்தையும், திருப்பதியையும் காட்டினால், பார்க்கிறவர்களுக்கு அந்த க்ஷேத்திரங்களுக்குச் சென்று ஆலய தரிசனம் செய்தது போலவே இருக்கும். க்ஷேத்திரங்களைப் பற்றிச் சொல்லுவானேன்! சாக்ஷாத் வைகுண்டத்தையே அரங்க மேடைக்கு அவர் கொண்டு வந்து விடுவார். ஸ்ரீ மகாவிஷ்ணு நாடகம் பார்க்க வந்தாரானால், 'இதுதான் உண்மையான வைகுண்டம்' என்று பிரமிக்கும்படி இருக்கும்.

காட்சிகளைத் தத்ரூபமாகக் காட்டுவது போல, வேஷப் பொருத்தங்களின் விஷயத்திலும் ஸ்ரீ கன்னையா மிக்க கவனம் செலுத்துவதுண்டு. ஸ்ரீ ராமரையும், லக்ஷ்மணரையும், ஸ்ரீ கிருஷ்ணனையும், பலராமரையும், இதிகாசங்களில் உள்ள வர்ணனைக்கு உகந்தவாறு மேடையில் கொண்டு வந்து நிறுத்துவார்.

அத்தகைய ஸ்ரீ கன்னையா ஒரு தடவை தமது கம்பெனியைச் சேர்ந்த நடிகர்களைப் பார்த்துச் சொன்னார்:—"அரங்க மேடையில் நாம் இராம லக்ஷ்மணர்களைக் காட்டுவதென்றால், அதற்கு எவ்வளவோ பிரயத்தனப்பட்டு, தகுந்தவர்களைத் தேடிப் பிடித்து, சரியானபடி வேஷம் போட்டு, எத்தனையோ பயிற்சி அளித்த பிறகு கொண்டு வந்து நிறுத்த வேண்டியிருக்கிறது. ஆனால் ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அம்மாள் காலட்சேபம் செய்யும் போது, கையை ஒரு பக்கம் காட்டி, 'அதோ இராம லக்ஷ்மணர்கள் வந்து விட்டார்கள்!' என்று சொன்னால், உடனே இராம லக்ஷ்மணர்கள் நம் கண் முன்னால் நிற்கிறார்கள்!" என்றார்.

இராம லக்ஷ்மணர்களை மட்டுந்தானா ஸ்ரீமதி சரஸ்வதி பாய் கொண்டு வருவார்! சீதா தேவியையும் கொண்டு வருவார்! தாடகை—சூர்ப்பனகையையும் கொண்டு வருவார்! சாக்ஷாத் தசகண்ட ராவணனையும் இலங்கையிலிருந்து கழுத்தைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு வந்து நம் முன்னால் நிறுத்துவார். ஸ்ரீமதி சரஸ்வதி பாய் 'திரௌபதி மான சம்ரக்ஷணம்' என்ற காலட்சேபம் செய்யும்போது, துரியோதனனுடைய மகாசபை நம் கண் முன்னால் நிற்கும். பீஷ்மப் பிதாமகர் முதலிய கிழவர்களும், வீமன் அர்ஜுனன் முதலிய வாலிபர்களும் செய்வதறியாது தலை குனிந்து நிற்பார்கள். பாஞ்சாலி அலங்கோலமாகச் சபையிலே கொண்டு வரப்படுவதையும், அவள் ஆடை குலைவுற்று நிற்பதையும், 'ஆ' என்று அழுது அடிப்பதையும், மாடு நிகர்த்த துச்சாதனன் அவள் மைக்குழல் பற்றி இழுப்பதையும் நம் கண் முன்னால் காண்போம். பாரதம் நடந்த காலத்தில் பாஞ்சாலி கண்ணனை எண்ணிக் கதறிய போது ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஒரு வேளை சிறிது ஆலஸ்யமாக இருந்தாலும் இருந்திருக்கலாம். ஆனால் ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அம்மாள் பாஞ்சாலியின் நிலையைக் குறித்து உருகி அழைக்கும் போது, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா 'இதோ வந்தேன்!' என்று ஓட்டமாக ஓடி வந்து விடுவார்!

அத்தகைய வாக்கு வன்மை பெற்றவர் ஸ்ரீமதி சரஸ்வதி பாய். வாக்கு வன்மை மட்டுந்தானா! சங்கீதக் கலையில் அபார தேர்ச்சி வாய்ந்தவர். தமிழ், சம்ஸ்கிருதம், தெலுங்கு, மகாராஷ்டிரம், ஹிந்தி, கன்னடம் ஆகிய பல மொழிகளில் விற்பன்னர். ஒழுக்கத்தால் உயர்ந்தவர்; வினயத்தில் சிறந்தவர்; பகவானிடம் பரிபூரண பக்தி கொண்டவர்; அதற்கு ஒரு படி அதிகமாகக் குருவினிடம் பக்தி வாய்ந்தவர்.

"பெண் குலத்தின் வெற்றி" என்று மகாகவி பாரதியார் பாடினாரே, அவருடைய அருள் வாக்கினுக்குப் பிரத்யட்சப் பிரமாணமாக இன்று நம் முன்னால் விளங்கி வருகிறவர்.

* * *

ஒம்பது ஆண்டுகளுக்கு முன்னால் சென்னை எழும்பூரில் உயர் குலத்துப் பெண்கள் சிலர் சேர்ந்து 'மாதர் சங்கம்' ஒன்று ஸ்தாபித்தார்கள். சங்கம் ஒருவாறாக நடந்து வந்தது. ஆனால் சங்கத்தில் மாதர்கள் கூடி என்ன செய்வது என்பது பற்றி ஒன்றும் தெளிவாகவில்லை. இதனால் 'மாதர் சங்கம்', அதில் சேர்ந்திருந்த பல மாதர்களுக்கு 'மாதர் சங்கடமாக' நடந்து வந்தது.

ஒருநாள் மாதர் சங்கத்தைச் சேர்ந்த பெண்மணி ஒருவர், பத்து வயதுச் சிறுமி ஒருத்தியைச் சங்கத்துக்கு அழைத்து வந்தார். "இந்தப் பெண் பிரசங்கம் செய்யப் போகிறாள்; எல்லாரும் கேளுங்கள்!" என்றார். ஏதோ தமாஷ் என்று நினைத்துப் பெண்மணிகள் வந்து கூடினார்கள். அந்தச் சிறுமி பிரசங்கம் செய்தாள். பிரசங்கத்துக்கு நடுவில் இரண்டொரு பாட்டுக்களும் பாடினாள். வேடிக்கை என்று எண்ணி வந்த பெண்மணிகள் மெய்மறந்து கேட்டு மகிழ்ந்தார்கள்.

தற்செயலாக அன்று மாதர் சங்கத்துக்கு ஸர் சங்கரன் நாயர் வந்திருந்தார். ஹைகோர்ட்டு ஜட்ஜ் பதவி, காங்கிரஸ் அக்கிராசனர் பதவி முதலிய பெரிய பதவிகளை வகித்தவர். சமூக சீர்திருத்தங்களில் மிக்க அக்கரையுள்ளவர். மாதர் சங்கத்தில் என்ன நடக்கிறது என்று பார்த்துவிட்டு, லேடி சங்கரன் நாயரை வீட்டுக்கு அழைத்துப் போவதற்காக வந்தார் போலும். அவரும் அச்சிறுமியின் சங்கீத உபந்நியாசத்தைக் கேட்க நேர்ந்தது. "இந்தக் குழந்தையிடம் அபாரமான ஆற்றல் இருக்கிறது. அந்த ஆற்றலை வெளிக் கொணர்ந்து பிரகாசப் படுத்துவதற்கு முயற்சி செய்ய வேண்டும்" என்று ஸர் சங்கரன் நாயர் கூறிவிட்டுச் சென்றார். அவருடைய விருப்பம் அற்புதமான முறையில் நிறைவேறியது.

அதே சமயத்தில் அச் சிறுமியிடம் மறைந்து கிடந்த சக்திகளின் பெருமையை இன்னொருவரும்

தென்னாட்டில் அப்போதிருந்த சமூக வாழ்வின் சூழ்நிலையும் அம் முயற்சிக்கு விரோதமாயிருந்தது. நாலு புருஷர்கள் உள்ள இடத்தில் பெண்கள் பேசுவதற்கே கூச்சப்படுவார்கள். பொது மேடையில் ஏறிப் பெண்கள் பேசுவதென்பது கனவிலும் கருத முடியாத காரியமாயிருந்தது. இதையெல்லாம் அறிந்திருந்தும் ஸ்ரீகிருஷ்ணாச்சார் அத்தகைய முயற்சியை மேற்கொண்டார்.

குருவுக்கேற்ற சிஷ்யையாக சிறுமி சரஸ்வதி பாய் விளங்கினாள். மூன்று நாலு வருஷங்களுக்குள் சங்கீதக் கலையைக் கற்று, பாஷா ஞானம் அடைந்து, இதிகாச புராணக் கதைகளையும் நன்கு அறிந்து, சபைகளில் காலட்சேபம் செய்வதற்குரிய தகுதியைப் பெற்று விட்டார். அப்போது ஒரு பெரிய இடையூறு குறுக்கிட்டது. 'சமுத்திரம் பொங்கிவந்து உலகத்தையே அழித்து விடப் போகிறது!' என்ற வதந்தி சென்னை நகரில் பரவியது. பதினாறு வயதுச் சிறுமியான சரஸ்வதி பாய் அப்போது என்ன எண்ணினார் தெரியுமா! "அடாடா! இவ்வளவு கஷ்டப்பட்டுச் சங்கீதக் கலையை அப்பியசித்துக் காலட்சேபம் செய்யவும் கற்றுக் கொண்டேனே! நாலு இடத்தில், ரஸிகர்கள் அடங்கிய சபைகளில், நான் காலட்சேபம் செய்த பிறகு கடல் பொங்கி வரக்கூடாதா! அதற்கு முன்னாலேயே கடல் பொங்கி வந்து உலகம் அழிந்து விட்டால், நான் கஷ்டப்பட்டுக் கற்ற கலை வீணாகிவிடுமே!" என்று வருத்தப் பட்டார்.

## வீண் பழி !




"ஜீலம் நதி தண்ணீர் இன்றி வற்றிவிட்டது. ஆனால் பாகிஸ்தான் பிரதமர் நாஜிமுதீனே இந்தியாமீது அநாவசியமாகப் பாய்கிறார்" என்று ஜின்னா அவாமி லீக்கின் தலைவர் சுஹ்ரவர்த்தி உண்மையை அம்பலப்படுத்தியிருக்கிறார்.

---

சொன்னார்கள். ஸ்திரீகள் ஹரிகதை செய்வது என்று ஏற்பட்டு விட்டால் தங்களுடைய வியாபகத்துக்கும் பங்கம் வந்து விடுமோ என்று எண்ணிய பாகவதர்கள் மூர்த்தண்யமாக எதிர்த்தார்கள். "சரஸ்வதி பாயைக் கதைக்குக் கூப்பிட்டால் நாங்கள் வரமாட்டோம்" என்றார்கள்.

இத்தகைய எதிர்ப்புகளுக் கெல்லாம் ஈடு கொடுத்துத் தளர்வில்லாத மனோ தைரியத்துடன் நின்று ஸ்ரீமதி சரஸ்வதி பாய் மேலும் மேலும் முன்னேறி வந்தார்.

பெண்மணிகளில் தீரச்செயல்கள் புரிவோரை வீராங்கனைகள் என்று சொல்லுவதுண்டு. இதிகாசங்களில் சீதை, திரௌபதி, சுபத்திரை, சத்தியபாமா முதலிய வீராங்கனைகள் இணையற்று விளங்குகிறார்கள். இராஜபுத்திர நாட்டுப் பெண்கள் தங்கள் கணவன்மார்களையும், புதல்வர்களையும் போர்க்களத்துக்கு அனுப்பி விட்டுத் தாங்கள் தீயில் குதித்து இறந்து 'வீராங்கனைகள்' எனச் சரித்திரப் புகழ் பெற்றார்கள். ஜான்ஸி ராணி போன்று போர்க்களத்திற்கே சென்று போரிட்டு மடிந்த வீராங்கனைகளும் உண்டு.

சமூகத்துறையில் அர்த்தமற்ற சம்பிரதாயங்களையும் மூடத்தனமான கட்டுப்பாடுகளையும் உடைத்து எறிந்து விட்டு வந்து முன்னேற்றப் பாதையில் வழி காட்டுகிறவர்களையும் வீராங்கனைகள் என்று கூறலாம் அல்லவா! நம் காலத்தில் தென்னாட்டில் பிறந்த வீராங்கனைகளில் ஸ்ரீமதி சரஸ்வதி பாய் தலைசிறந்து விளங்குகிறார்.

ஸ்ரீமதி சரஸ்வதி பாயின் காலட்சேபங்களின் மூலமாக எத்தனையோ ஆயிரமாயிரம் ஜனங்கள் சங்கீத ரஸிகத் தன்மை பெற்றிருக்கிறார்கள்; இதிகாச புராணங்களின் சிறப்புக்களை அறிந்திருக்கிறார்கள். 'நந்தன் சரித்திரம்' ஒன்றின் மூலமாக மட்டும் ஸ்ரீமதி சரஸ்வதி பாய் தமிழ் மொழிக்குச் செய்திருக்கும் தொண்டு மகத்தானது.

ஸ்ரீமதி சரஸ்வதி பாய்க்கு இப்போது அறுபது பிராயம் ஆகிறது. இன்னமும் அவருடைய குரல் கணீரென்று ஒலித்து, எளிதில் எட்டமுடியாத இடங்களையெல்லாம் எட்டிச் சஞ்சரித்து, முத்து மழை பொழிவது போன்ற சங்கதிகளைப் பொழியக் கூடியதாயிருக்கிறது. அவருடைய வாக்கு வன்மையும் அவ்விதமே சிறந்து விளங்குகிறது.

* * *

தென்னாட்டில் சில காலமாகக் கலை, கவிதை, தேசத் தொண்டு ஆகிய துறைகளில் சேவை செய்தவர்களைப் பாராட்டுவது என்ற சிறந்த வழக்கம் பரவி வருகிறது. காயனபடு கீர்த்தனபடு ஸ்ரீமதி சரஸ்வதி பாயின் ஷஷ்டியப்த பூர்த்தியை யொட்டி, வரு மார்ச்சு மாதம் 10உ ஒரு வைபவம் நடத்துவதற்குப் பிரமுகர்கள் சிலர் பிரயத்தனம் செய்து வருகிறார்கள். அன்று ஸ்ரீமதி சரஸ்வதி பாய்க்கு ஒரு நிதி முடிப்பும், தங்கத் தோடாவும் அளித்துச் சிறப்பிப்பது என்றும், அவருடைய குரு பண்டித கிருஷ்ணாச்சாருக்குப் பொற் சால்வை போர்த்திக் கௌரவிப்பதென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். இந்த வைபவம் ஸ்ரீமதி சரஸ்வதி பாய் ஐம்பது வருஷமாகச் செய்து வரும் கலைப் பணிக்கு உகந்தவாறு சிறப்புற நடைபெற வேண்டுமென்று விரும்புகிறோம். அதற்குரிய உதவிகள் அனைத்தும் செய்யுமாறு நேயர்களை வேண்டிக் கொள்கிறோம்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 43

## "புலி எங்கே?"

**ஆ**தித்த கரிகாலர் எப்பேர்ப்பட்ட ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டார் என்பதை வந்தியத்தேவன் கவனித்தான். கண்மூடித் திறக்கும் நேரத்தில் குதிரையைச் செலுத்திக் கொண்டு வந்து பன்றியின்மீது தன் கையிலிருந்த வேலைச் செலுத்தினான். வேல் பன்றியின் முதுகுத் தோலின் மீது மேலாகக் குத்தியது. பன்றி உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு திரும்பியது. அந்த வேகத்தில்

லம் ஒரு காட்டுப் பன்றியினாலேயா கொல்லப்பட வேண்டும்?......

நல்ல வேளையாக, அருகாமையிலேயே தாழ்ந்து படர்ந்த மரம் ஒன்று இருந்தது. வந்தியத் தேவன் குதிரை மீதிருந்து பாய்ந்து மரத்தின் கிளை ஒன்றைத் தாவிப் பிடித்துக் கொண்டான். கால் முதல் தோள் வரையில் அவனுடைய பலத்தை முழுதும் பிரயோகித்து எழும்பிக் கிளைமீது ஏறிக்கொண்டான். அதே




அத்தியாயம் 43

"புலி எங்கே?"

ஆதித்த கரிகாலர் எப்பேர்ப்பட்ட ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டார் என்பதை வந்தியத்தேவன் கவனித்தான். கண்மூடித் திறக்கும் நேரத்தில் குதிரை

லம் ஒரு காட்டுப் பன்றியினாலேயா கொல்லப்பட வேண்டும்?......

நல்ல வேளையாக, அருகாமையிலேயே தாழ்ந்து படர்ந்த மரம் ஒன்று இருந்தது.

தாக்குதலை அவரால் அச்சமயம் சமாளிக்க முடியுமா என்பது சந்தேகந்தான். அவர் கையில் உடனே பிரயோகிக்கக் கூடிய ஆயுதம் இல்லை. வில்லை வளைத்து அம்பு விடவேண்டும். குதிரைக்கு அடியில் விழுந்து அகப்பட்டுக் கொண்டதில் அவருக்குப் பலமான காயம் பட்டிருந்தாலும் பட்டிருக்கலாம். எப்படியும் இளவரசருக்குச் சிறிது சாவகாசம் ஏற்படுத்திக் கொடுப்பது அவசியம். இவ்வளவையும் மின்னல் மின்னும் நேரத்தில் வந்தியத்தேவன் யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தான். தான் ஏறியிருந்த மரக்கிளையைப் பலமாக உலுக்கி ஆட்டிக் கொண்டே "ஆகா ஊ கூ" என்று பெரிதாகச் சத்தமிட்டான்.

அவனுடைய யுக்தி பலித்தது. பன்றி மூர்க்காவேசத்துடன் அவன் ஏறியிருந்த மரத்தை நோக்கிப் பாய்ந்து வந்தது.

"வரட்டும்; வரட்டும். வந்து மரத்தின் பேரில் முட்டிக் கொள்ளட்டும்" என்று வந்தியத்தேவன் எண்ணிக் கொண்டிருக்கும் போதே, அவன் ஏறி உட்கார்ந்து உலுக்கிய மரக்கிளை மடமட வென்று முறிந்தது. கடவுளே! இது என்ன ஆபத்து?—கிளையுடன் தரையில் விழுந்தால்? அடுத்த நிமிடமே பன்றியின் கோரப் பற்கள் அவனைச் சின்னாபின்னமாகக் கிழித்து விடும். வேறு கிளை ஒன்றைத் தாவிப் பிடித்துக் கொண்டால் தான் பிழைக்கலாம். அப்படித் தாவிப் பிடிக்க முயன்றான். பிடிக்க முயன்ற கிளை சற்றுத் தூரத்தில் இருந்தபடியால் ஒரு கை மட்டுந்தான் பிடித்தது. பிடித்த கிளை மெல்லியதாயிருந்த படியால் வளைந்து கொடுத்தது. கைப்பிடி நழுவத் தொடங்கியது. கால்கள் ஊசலாடின! சரி! கீழே விழ வேண்டியதுதான். உடனே மரணந்தான்! சந்தேகமில்லை. ஏதோ, கடைசி கடைசியாக ஆதித்த கரிகாலரைக் காப்பாற்ற முடிந்தது அல்லவா? இளையபிராட்டி இதை அறியும் போது மகிழ்ச்சி அடைவாள் அல்லவா? தன்னுடைய மரணத்துக்காக ஒரு துளி கண்ணீர் விடுவாள் அல்லவா?......

ஏதோ ஒரு பயங்கரமான சத்தம் கேட்டது! அதே சமயத்தில் கைப்பிடியும் நழுவி விட்டது! வந்தியத்தேவன் கண்களை இறுக மூடிக் கொண்டான். தடால் என்று கீழே விழுந்தான். விழும் போதே நினைவை இழந்தான்!

**வ**ந்தியத்தேவன் நினைவு வந்து கண் விழித்துப் பார்த்தபோது ஆதித்த கரிகாலர் அவன் முகத்தில் தண்ணீர் தெளித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். சட்டென்று நிமிர்ந்து எழுந்து உட்கார்ந்து, "இளவரசே! பிழைத்திருக்கிறீர்களா?" என்றான்.

"ஆமாம்; உன்னுடைய தயவினால் இன்னும் பிழைத்திருக்கிறேன்" என்றார் ஆதித்த கரிகாலர்.

"காட்டுப் பன்றி என்ன ஆயிற்று?" என்று கேட்டான்.

"அதோ!" என்று இளவரசர் சுட்டிக் காட்டிய இடத்தில், காட்டுப் பன்றி செத்துக் கிடந்தது.

வந்தியத்தேவன் அதைச் சற்று உற்றுப் பார்த்துவிட்டு, "அரசே! இவ்வளவு சின்ன உருவமுள்ள பிராணி என்ன பாடு படுத்தி விட்டது? கந்தமாறன் காட்டுப் பன்றியைக் குறித்துச் சொன்னது அவ்வளவும் உண்மைதான். கடைசியில் அதை எப்படித்தான் கொன்றீர்கள்?" என்று கேட்டான்.

"நான் கொல்லவில்லை. உன்னுடைய வேலும் நீயுமாகச் சேர்ந்து தான் கொன்றீர்கள்!" என்றார் இளவரசர்.

வந்தியத் தேவன் அதன் பொருள் விளங்காதவனைப் போல் இளவரசரின் முகத்தைப் பார்த்தான்.

"என்னுடைய வேலைத் தாங்கள் நன்றாக உபயோகப் படுத்தியிருக்கிறீர்கள்! ஆனால் நான் ஒன்றும் செய்யவில்லையே! ஆபத்தான சமயத்தில் தங்களுக்கு உதவி செய்ய முடியாதவனாகி விட்டேனே?" என்றான்.

"நீ மரக் கிளையைப் பிடித்து உலுக்கிச் சத்தமிட்டாய் அல்லவா? அப்போது நான் குதிரை அடியிலிருந்து வெளிவந்து உன் வேலை எடுத்துக் கொண்டேன். என் மனத்தில் கொந்தளித்துக் கொண்டிருந்த கோபத்தையெல்லாம், பாவம், இந்தப் பன்றியின் பேரில் பிரயோகித்தேன். வேலினால் குத்தப் பட்டதும் அது பயங்கரமாகச் சத்தமிட்டது. என் காதே செவிடாகிவிடும் போலிருந்தது. ஆனால் வேலினால் மட்டும் அது சாகவில்லை. நீ மரக் கிளையிலிருந்து நழுவி அதன் பேரில் விழுந்தாய்; அந்த அதிர்ச்சியினால் தான் செத்தது!" என்று கரிகாலர் சொல்லி விட்டுச் சிரித்தார். வந்தியத்தேவனும் அதை நினைத்து நினைத்துச் சிரித்தான். உடம்பைத் தடவிப் பார்த்துக் கொண்டு "பன்றியின் மேல் விழுந்ததினாலே தான், காயம் படாமல் தப்பினேன் போலிருக்கிறது. மகாவிஷ்ணு வராக அவதாரம் எடுத்து இரணியாட்சனைக் கொன்றார்



என்பதை இனி என்னால் நம்ப முடியும்! அப்பா! எவ்வளவு மூர்க்கமான பிராணி?'' என்றான்.

"இந்தச் சிறு காட்டுப் பன்றியைப் பார்த்து விட்டு வராகாவதாரத்தை மதிப்பிடாதே, தம்பி! வடக்கே விந்திய மலையைச் சேர்ந்த காடுகளிலே தலையிலே ஒற்றைக் கொம்பு உள்ள பன்றி ஒன்று இருக்கிறதாம். ஏறக் குறைய யானை அவ்வளவு பெரிதா யிருக்குமாம். அந்த மாதிரி பன்றியா யிருந்து, நீ ஏறி யிருந்த மரத்தை முட்டி யிருந்தால், மரம் என்ன பாடு பட்டிருக்கும் என்று யோசித்துப் பார்!'' என்றார் இளவரசர்.

"மரம் அடியோடு முறிந்து விழுந்திருக்கும். தாங்கள் எறிந்த வேலும் முறிந்திருக்கும். நம் கதி அதோகதியாகி யிருக்கும். சோழ குலத்தின் எதிரிகளுக்கு வேலை மிச்சமாகப் போயிருக்கும்'' என்றான் வந்தியத் தேவன்.

"தம்பி! உண்மையைச் சொல்லு! என் குதிரை தடுமாறி விழுந்தவுடனே நீ வேலை எறிந்தாயே? அந்தக் காட்டுப் பன்றியின் மேல் எறிந்தாயா? என்பேரில் எறிந்தாயா?'' என்று ஆதித்த கரிகாலர் கேட்டார்.

**வ**ந்தியத் தேவன் ஆத்திரத்துடன் "ஐயா! உண்மையாகவே தாங்கள் இந்தக் கேள்வி

கேட்கிறீர்களா? அப்படித் தாங்கள் சந்தேகப்படுவதா யிருந்தால் பன்றியைக் கொன்று என்னைக் காப்பாற்றி யிருக்க வேண்டிய அவசியம் இல்லையே?'' என்றான்.

''ஆமாம், ஆமாம். உன் பேரில் சந்தேகப்படக் கூடாதுதான். நீ மரக்கிளையை ஆட்டிக் கொண்டு கூச்சல் போட்டிரா விட்டால் எனக்கே அந்தப் பன்றி யமனாக இருந்திருக்கும். ஆனாலும் நீ வேலை எறிந்தபோது ஒருகணம் எனக்கு அத்தகைய சந்தேகம் உண்டாயிற்று. இப்போதெல்லாம் எனக்கு எதைப் பார்த்தாலும், யாரைப் பார்த்தாலும் வீண் சந்தேகம் தோன்றுகிறது. யமன் என்னைத் தொடர்ந்து வந்து கொண்டே யிருக்கிறான் என்ற பிரமையைப் போக்கிக் கொள்ளவே முடியவில்லை. யமன் இந்தப் பன்றியின் உருவத்தில் என்னைக் கொல்ல வந்ததாகவும் எண்ணினேன்...''

''அப்படியானால் மிக நல்லதாய்ப் போயிற்று. அரசே! தங்களைத் தொடர்ந்து வந்த யமன் செத்து ஒழிந்தான். இனி என்ன கவலை? கந்தமாறனோடு நாம் போட்டியிட்ட பந்தயத்திலும் ஜயித்து விட்டோம். பன்றியை இழுத்துக் கொண்டு போக



வேண்டியது தானே? புறப்படலாம் அல்லவா?" என்றான் வல்லவரையன்.

"புறப்பட வேண்டியதுதான்! ஆனால் அவசரம் என்ன? சற்று இங்கே தங்கிக் களைப்பு ஆறி விட்டுப் போகலாம்" என்றார் இளவரசர்.

"தாங்கள் களைப் படைந்ததாகச் சொல்வதை இப்போதுதான் முதன் முதலாகக் கேட்கிறேன். ஆம், குதிரையின் அடியில் சிக்கி ரொம்பக் கஷ்டப் பட்டுப் போயிருப்பீர்கள்."

"அது ஒன்றுமில்லை. உடலின் களைப்பைக் காட்டிலும் உள்ளத்தின் களைப்புத்தான் அதிகமா யிருக்கிறது. வந்த வழியாகவே அவ்வளவு தூரமும் காட்டு வழியில் திரும்பிப் போக வேண்டுமா? மறுபடியும் அந்த மூடர்களுடன் சேர்ந்தல்லவா பிரயாணம் செய்ய வேண்டி வரும்? அதைக் காட்டிலும் இந்த ஏரியைக் கடந்து போய் விட்டால் என்ன?"

"கடவுளே! இந்தச் சமுத்திரம் போன்ற ஏரியை நீந்திக் கடக்க வேண்டும் என்றா சொல்கிறீர்கள்? பன்றியிடமிருந்து என்னைத் தப்ப வைத்து ஏரியில் மூழ்கடித்துக் கொல்ல வேண்டும் என்று உத்தேசமா?" என்றான் வந்தியத்தேவன்.

"உனக்கு நீந்தத் தெரியாது என்பது நினைவிருக்கிறது. என்னால் கூட இவ்வளவு பெரிய ஏரியை நீந்திக் கடக்க முடியாது. ஒரு படகு கிடைத்தால் காரியம் சுலபமாகி விடும். சற்று முன் ஒரு படகு பார்த்தோமே, அது எங்கேயாவது சமீபத்தில் கரையோரமாகத் தானே தங்கியிருக்கும்? அதைத் தேடிப் பிடித்தால் என்ன?"

"குதிரைகளின் கதி என்ன ஆவது? காட்டு மிருகங்களுக்கு உணவாகட்டும் என்று விட்டு விட்டுப் போய் விடலாமா?" என்றான் வந்தியத் தேவன்.

உடனே ஏதோ ஞாபகம் வந்து திடுக்கிட்டவன்போல் துள்ளிக் குதித்து எழுந்து "ஐயா! புலி எங்கே?" என்று கேட்டான்.

"நானும் அதை மறந்து விட்டேன். பக்கத்தில் எங்கேயாவது மறைந்திருக்கப் போகிறது. யமன் பன்றி ரூபத்தில் வராமல் ஒருவேளை புலி ரூபத்திலும்

ஏரியில் தண்ணீர் கொண்டு வந்து சேர்த்த அந்த வாய்க்கால் வடக்கே போகப் போகக் குறுகலாகிக் கொண்டு சென்றது. அவ்விதம் குறுகலாகியிருந்த இடத்தில் வாய்க்காலின் மீது ஒரு பெரிய மரம் விழுந்து இரு கரைகளையும் தொட்டுக் கொண்டிருந்தது. புலி அந்த மரப் பாலத்தின் மீது மெல்ல ஊர்ந்து சென்று அக்கரையை நெருங்கிக் கொண்டிருந்ததை இரண்டு பேரும் கவனித்தார்கள். இரண்டு பேருடைய மனத்திலும் ஒரே எண்ணம் உதித்தது.

"ஆகா! படகிலே வந்த பெண்கள்!" என்று இருவரும் ஏக காலத்தில் வாய் விட்டுக் கூறினார்கள்.

பின்னர், "இந்த வாய்க்காலை அடுத்துள்ள தீவின் கரையிலேதான் அந்தப் பெண்கள் இறங்கி யிருக்க வேண்டும்" என்றான் வல்லவரையன்.

"காயம்பட்ட சிறுத்தை மிக அபாயகரமானது" என்றார் இளவரசர்.

"பன்றியுடன் புலியையும் கொன்று எடுத்துப் போகத்தான் வேண்டும்."

"இந்த வாய்க்காலை எப்படித் தாண்டுவது? குதிரைகள் மரப் பாலத்தின்மேல் போக முடியாதே?"

"தண்ணீர் கொஞ்சமாகத்தான் இருக்கும். இறங்கிப் போகலாம்."

கரிகாலரின் குதிரையும் அதற்குள் எழுந்து வந்தியத்தேவன் குதிரைக்கு அருகே போய் நின்று கொண்டிருந்தது. எஜமானர்கள் அந்தரங்கம் பேசியது போல் அவையும் தங்களுக்குச் சற்று முன் நேர்ந்த அபாயத்தைப் பற்றிப் பேசிக் கொண்டன போலும்.

இருவரும் தத்தம் குதிரைமீது தாவி ஏறினார்கள். வாய்க்காலில் குதிரைகளை இறக்கினார்கள்.

வாய்க்காலில் தண்ணீர் அதிகமாக இல்லைதான். ஆனால் சேறும் உளையும் அதிகமா யிருந்தன. குதிரைகள் தட்டுத் தடுமாறித் தத்தளித்துச் சென்றன.

கோடிக்கரைப் புதை சேற்றுக் குழிகளை நினைத்துக் கொண்டு வந்தியத்தேவன் "இந்தச் சேறு ஒன்றும் பிரமாதமில்லை" என்று தைரியமடைந்தான்.

ஒரு தடவை தீய எண்ணமாகிற சேற்றில் இறங்குகிறவர்கள் மீண்டு கரை ஏறுவது எவ்வளவு கடினம் தெரியுமா?" என்று கரிகாலர் கேட்டார். இளவரசரின் உள்ளம் உண்மையில் சேறு போலக் குழம்பி யிருக்கிறது என்று வந்தியத் தேவன் எண்ணிக் கொண்டான்.

குதிரைகள் மிகப் பிரயாசையுடன் அக்கரையை அடைந்தன.

காட்டுக்குள்ளே மிக ஜாக்கிரதையுடன் நாலாபுறமும் உற்றுப் பார்த்துக் கொண்டு இருவரும் சென்றார்கள்.

கரிகாலரின் கையில் வில்லும் அம்பும் தயாரா யிருந்தன.

வந்தியத்தேவன் தன் வேலையும் புலியின் பேரில் எறிவதற்கு ஆயத்தமாக வைத்துக் கொண்டிருந்தான்.

திடீரென்று, காட்டில் சாதாரணமாகக் கேட்கும் சத்தங்களை அடக்கிக் கொண்டு ஒரு பெண்ணின் 'கிரீச்' என்ற குரல், "அம்மா! அம்மா! புலி!" என்று கதறுவது கேட்டது.

மணிமேகலை மரக்கிளையின் மீது சிறுத்தையைப் பார்த்த அதே சமயத்தில் வஸந்த மண்டபத்தில் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்த தோழிப் பெண் ஒருத்தியும் அந்தப் புலியைப் பார்த்து விட்டு அவ்விதம் அலறினாள்.

அந்தக் குரல் இரு நண்பர்களின் செவிகளிலும் விழுந்து ரோமாஞ்சனத்தை உண்டு பண்ணியது.

குதிரைகளை வேகமாகச் செலுத்திக் கொண்டு குரல் வந்த திசையை நோக்கி அவர்கள் சென்றார்கள்.

ஏரிக் கரையின் ஒரு திருப்பம் திரும்பியதும் அவர்கள் கண்ட காட்சி இருவரையும் திடுக்கிட்டுத் திகில் கொள்ளும்படிச் செய்து விட்டது.

நந்தினியும் மணிமேகலையும் படித்துறையில் குளிப்பதற்காக இறங்கிக் கொண்டிருந்த சமயத்தில், அருகில் சாய்ந்திருந்த மரக்கிளை ஒன்றின்மீது சிறுத்தை சிறிது சிறிதாக ஊர்ந்து மேலேறிக் கொண்டிருந்தது.

பன்றியோடு போட்ட சண்டையில் நன்றாக அடிபட்டுக் காயமுற்றிருந்த அந்தச் சிறுத்தை அப்போது தன் உயிரைக் காப்பாற்றிக் கொண்டால் போதும் என்ற நிலையில் இருந்தது.

ஆனால் இது அந்தப் புலியைத் தவிர வேறு யாருக்கும் தெரிந்திருக்கவில்லை.

அடுத்த கணம் சிறுத்தை தண்ணீரில் நின்ற பெண்களின் மீது பாயப்போகிறதென்று கரிகாலரும் வந்தியத்தேவனும் எண்ணினார்கள்.

வந்தியத்தேவன் வேலை உபயோகிக்கத் தயங்கினான். வேல் தவறிப் பெண்களின் மீது விழுந்து விட்டால் என்ன செய்வது என்று பயந்தான்.

கரிகாலருக்கு அத்தகைய தயக்கம் ஒன்றும் ஏற்படவில்லை. வளைத்திருந்த வில்லில் அம்பைக் கோத்து நன்றாகக் குறி பார்த்து இழுத்து விட்டார்.

அம்பு விர்ரென்று சென்று சிறுத்தையின் அடி வயிற்றில் பாய்ந்தது.

சிறுத்தை பயங்கரமாக உறுமிக் கொண்டு அப்பாலிருந்த பெண்களின் மீது பாய்ந்தது.

அடுத்த கணத்தில் என்ன நேர்ந்தது என்பதைத் தெளிவாகப் பார்க்க முடியாதபடி ஒரே குழப்பமாகி விட்டது.

சிறுத்தையும் பெண்கள் இருவரும் திடீரென்று மறைந்து விட்டார்கள்.

சில கண நேரம் கழித்து மூவரும் வெவ்வேறு இடத்தில் தண்ணீருக்குள்ளிருந்து வெளியே தலையை நீட்டினார்கள்.

ஏரியின் நீரோடு இரத்தம் கலந்து செக்கச் செவேலென்று ஆயிற்று.

## அத்தியாயம் 44

# காதலும் பழியும்

இரு நண்பர்களும் மேற் கூறியவற்றையெல்லாம் திகிலுடன் பார்த்துக் கொண்டு தானிருந்தார்கள். குதிரைகள் மீதிருந்து குதித்தார்கள். தண்ணீர்க் கரையோரம் பாய்ந்து வந்தார்கள்.

இதற்குள் சிறுத்தை தண்ணீரிலே சிறிது தூரம் சென்று விட்டது! அது

ஒரு வழியாகப் பிராணனை விட்டு விட்டது என்று தோன்றியது.

பெண்மணிகள் இருவரும் புலியினால் எவ்வளவு காயப்படுத்தப் பட்டார்கள் என்பது ஒன்றும் தெரியவில்லை.

இருவரும் தண்ணீரில் குதித்துப் பெண் மணிகளை நோக்கிச் சென்

முதலில் வந்தியத்தேவன் மணிமேகலையை அணுகிச் சென்றான். ஏனெனில் நந்தினியை நெருங்குவதற்கு அவனுக்கு அச்சமாக இருந்தது.

மணிமேகலைக்குக் காயம் எதுவும் ஏற்படவில்லை. புலி விழுந்த வேகத்தில் அவளும் தண்ணீரில் விழுந்து முழுகியதில் சிறிது மூச்சுத் திணறியதைத் தவிர வேறொன்றும் அவளுக்கு நேரவில்லை.

வந்தியத்தேவன் தன் அருகில் வருவதைப் பார்த்ததும் அவள் எல்லையில்லாத உள்ளக் கிளர்ச்சி அடைந்து கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

கரிகாலர் வந்தியத் தேவனுடைய கையைப் பிடித்து நிறுத்தி நந்தினியின் பக்கம் அனுப்பி விட்டுத் தன்னை நோக்கி வருவதை அவள் அறியவில்லை. இரண்டு கைகளினாலும் கரிகாலர் அவளைத் தூக்கி

கடம்பூர் இளவரசி சற்று யோசித்து விட்டு, "ஐயா! தாங்கள் சோழகுலத் தோன்றல்; எல்லாம் அறிந்த புத்திமான். சிறு பெண்ணாகிய என்னிடம் இவ்விதம் பேசலாமா? என் தந்தையிடமல்லவா கேட்க வேண்டும்?" என்றாள்.

"பெண்ணே! உன் தந்தை சம்மதித்தால் நீ சம்மதிப்பாயா?"

"என் தந்தை சம்மதித்த பிறகு அவர் கேட்டால் சொல்லுவேன். தங்களிடம் இதைப் பற்றிப் பேசவே எனக்குக் கூச்சமாயிருக்கிறது. புலி என்னைக் கொல்லாமலும் நான் தண்ணீரில் முழுகிப் போகாமலும் என்னைக் காப்பாற்றினீர்கள். அதனால் தங்களிடம் எனக்கு ஏற்பட்டுள்ள நன்றி காரணமாக இத்தனை நேரமும் பொறுமையாக இருக்கிறேன்......"

மணிமேகலை அவர் காட்டிய திசையைப் பார்த்தாள். அந்தக் கணத்தில் அருவை என்னும் விஷம் அவளுடைய பால் போன்ற நெஞ்சில் ஏறிவிட்டது.

* * *

அதே சமயத்தில் வந்தியத்தேவனும் நந்தினியும் பேசிக் கொண்டிருந்தார்கள். நந்தினியின் தோள் ஒன்றில் புலி நகம் பட்டு இரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

மணிமேகலையைப் போல் நந்தினி கண்ணை மூடிக் கொள்ளவும் இல்லை. வந்தியத்தேவன் கைகளிலிருந்து விடுவித்துக் கொள்ள அவசரப்படவும் இல்லை. வந்தியத்தேவனே, தன் கையைச் சுட்டுக் கொண்டிருந்த நெருப்புத் தணலைக் கீழே போடுவது போல் அவசரமாக இளைய ராணியைக் கரையில் இறக்கி விட்டான். தண்ணீரில் மூழ்கி இருந்த போதிலும் நந்தினியின் உடம்பு உண்மையிலேயே சுட்டுக் கொண்டிருந்தது.

வந்தியத்தேவன் உள்ளத்தில் இனந் தெரியாத பீதி குடி கொண்டது. அவன் உடம்பு பதறியது.

நந்தினி புன்னகையுடன் "ஐயா! ஏன் இவ்வளவு பதட்டம்? என்னைப் புலி என்று நினைத்துக் கொண்டீரா? அல்லது புலியைக் காக்க நினைத்துத் தவறாக என்னைக் கரை சேர்த்து விட்டதற்காக வருத்தப்படுகிறீரா?" என்றாள்.

"அம்மணி! இவ்வளவு கொடூரமான வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம். தங்களைத் தொட்டு எடுத்து வரும்படி நேர்ந்து விட்டதை நினைத்து நெஞ்சு சிறிது கலக்கம் அடைந்தது......"

"குற்றம் உள்ள நெஞ்சு அல்லவா? அதனால் கலங்குகிறது!"

"தேவி! நான் ஒரு குற்றமும் செய்யவில்லையே!"

"குற்றம் செய்யவில்லையா? தஞ்சைக் கோட்டைக்குள் பிரவேசிப்பதற்கு என் உதவியை நாடினீர். முத்திரை மோதிரத்தைக் கொடுத்து உதவினேன். பிறகு என் அந்தப்புரத்தில் திருட்டுத் தனமாகப் பிரவேசித்தீர். அப்போதும் ...

குறுதியை நிறைவேற்றவில்லை. இவையெல்லாம் குற்றமல்லவா?"

"அந்தக் குற்றங்களை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அவை ஒவ்வொன்றுக்கும் காரணம் இருக்கிறது. நான் பிறரிடம் சேவகம் செய்பவன். ஆதித்த கரிகாலருடைய கட்டளைக்குக் கட்டுப்பட்டவன். இதைத் தாங்கள் எண்ணிப் பார்த்தால் என் பேரில் குற்றம் சாட்ட மாட்டீர்கள்......"

"ஆமாம்; புலியின் வாயிலிருந்து ஒரு பெண்ணைக் காப்பாற்ற வேண்டுமென்றால் கூடக் கரிகாலரின் கட்டளை உமக்கு வேண்டும். தண்ணீரில் மூழ்கும் பெண்ணைக் கரை சேர்ப்பதற்கும் அவருடைய அநுமதி வேண்டும். நான் கவனித்துக் கொண்டுதானிருந்தேன். அடடா! மணிமேகலையைக் காப்பாற்றுவதில் இளவரசர் எத்தனை பரபரப்புக் காட்டினார்? நான் நீரில் மூழ்கிச் செத்துப் போயிருந்தால் சந்தோஷப் பட்டிருப்பார். அவருடைய மனதை அறியாமல் நீர் என்னைக் கரை சேர்த்து விட்டீர்......"

"அம்மணி! அவ்வாறு சொல்ல வேண்டாம்! தாங்கள் ஓலை அனுப்பியபடியால் தான் கரிகாலர் காஞ்சியிலிருந்து இவ்வளவு தூரம் வந்திருக்கிறார்......"

"ஆனால் அவர் இங்கு வராமல் தடை செய்வதற்காக நீர் அவசர அவசரமாக ஓடிவந்தீர். இளைய பிராட்டியின் செய்தியுடன் வந்தீர். ஆனால் உம்முடைய முயற்சி பலிக்கவில்லை. என்னுடைய காரியத்தில் நீர் தலையிடுவதற்குச் செய்யும் முயற்சியெல்லாம் இவ்வாறு தான் தோற்றுப் போகும்!"

நந்தினியின் இந்த வார்த்தைகள் வந்தியத்தேவனின் மனக் குழப்பத்தை அதிகமாக்கின. அந்த வார்த்தைகளின் உட்கருத்தை நந்தினியின் முகபாவத்திலிருந்து தெரிந்து கொள்ளும் நோக்கத்துடன் அவளை உற்றுப் பார்த்தான். ஆனால் நந்தினியின் முகம் எவ்வித மாறுதலும் இன்றி வழக்கம் போலப் புன்னகை பூத்து விளங்கியது.

அனுப்பினேன். அதற்குக்கூட உமக்கு நன்றி இல்லை. உம்மைப் போல் நன்றி கெட்ட மனிதரை இந்த உலகத்தில் நான் பார்த்ததே இல்லை..."

"தேவி! என் மனத்தில் தங்களிடம் பரிபூரண நன்றி குடி கொண்டிருக்கிறது. சத்தியமாகச் சொல்கிறேன்."

"ஆனால் இந்த ஊருக்கு நாம் வந்து இத்தனை நாளாகியும் உமது நன்றியைத் தெரிவிப்பதற்கு நீர் ஒரு முயற்சியும் செய்யவில்லையே? உமது வார்த்தையை நான் எப்படி நம்புவது?"

"தங்களைத் தனியாகச் சந்திக்கும் போது தெரிவித்துக் கொள்ளலாம் என்றிருந்தேன். அதற்குரிய சந்தர்ப்பம் கிடைக்கவில்லை..."

"சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொள்ள நீர் ஒருவித முயற்சியும் செய்யவில்லை. முகத் தோற்றத்தினால், கண் பார்வையினால் ஒரு குறிப்பு வெளியிடக் கூடவில்லை. ஏன்? இத்தனை நாளாக என் பக்கம் நீர் ஒரு தடவையாவது திரும்பிப் பார்க்கக்கூட வில்லை..."

"தேவி! தாங்கள் சோழ நாட்டுத் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையரின் தர்மபத்தினி..."

"அதாவது கிழவனைக் கலியாணம் செய்து கொண்டவள் என்று என்னைப் பரிகசிக்கிறீர்; இல்லையா?"

"ஐயோ! தங்களை நான் பரிகசித்தால் கொடிய நரகத்துக்குப் போவேன்......"

"வேண்டாம், வேண்டாம்! எது எப்படியிருந்தாலும் சரி, பழுவேட்டரையரின் 'தர்ம பத்தினி' என்று என்னைக் குறிப்பிட வேண்டாம். நான் அவருடைய மனைவியே அல்ல......"

"ஐயோ! இது என்ன சொல்லுகிறீர்கள்?"

"உண்மையைத்தான் சொல்கிறேன். பலவந்தமாக ஒரு பெண்ணைப் பிடித்துக் கொண்டு வந்து வைத்திருந்தால், அவள் மனைவி ஆகி விடுவாளா?"

"தேவி! தாங்கள் தமிழ் நாட்டுப் பெண் குலத்தில் வந்தவர். பெண் குலத்தின் தர்மத்துக்கு மாறாகத் தாங்கள் எதுவும் செய்ய மாட்டீர்கள்!"

"பெண் குலத்தின் தர்மத்தை நான் அறிந்துதானிருக்கிறேன். பழந் தமிழ் நாட்டுப் பெண்கள் மனதினால் யாரைக் காதலித்தார்களோ, அவரையே கணவனாகக் கொண்டார்கள். பலவந்த மணத்துக்கு அவர்கள் உடன் படுவதில்லை!"

"ஆனால் தாங்கள் ......?"

"நீர் சொல்லப் போவது எனக்குத் தெரியும். பழுவேட்டரையருடைய பலவந்த மணத்துக்கு நான் எப்படி உடன்பட்டேன் என்று கேட்கிறீர். ஒரு முக்கிய நோக்கத்துக்காகவே உடன் பட்டேன். பழந் தமிழ் நாட்டுப் பெண்களுக்கு மற்றொரு சிறப்பியல்பும் உண்டு. அவர்கள் தங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிக்குப் பழிக்குப் பழி வாங்கியே தீர்வார்கள். ஐயா! நீர் எனது காதல் நிறைவேறுவதற்குத்தான் உதவி செய்யவில்லை; என் விரோதிகள் மீது பழி வாங்குவதற்காவது உதவி செய்வீரா?"

கடைசியாக நந்தினி கூறிய மொழிகள் ஏககாலத்தில் வந்தியத் தேவனுடைய நெஞ்சை வஜ்ராயுதத்தினால் பிளப்பது போலவும் அவன் தலையில் திடீரென்று பேரிடி விழுவது போலவும் அவனைத் திணறித் திண்டாடச் செய்தன.

"தேவி! தேவி! இது என்ன?...... காதலாவது? பழியாவது? எனக்கும் தங்கள் காதலுக்கும் என்ன சம்பந்தம்? காதலுக்கும் பழி வாங்குவதற்கும் என்ன சம்பந்தம்?......"

"சம்பந்தம் உண்டு. ஆனால் அதைப் பற்றிச் சொல்வதற்கு இப்போது நேரம் இல்லை. அதோ இளவரசரும் மணிமேகலையும் நெருங்கி வந்து கொண்டிருக்கிறார்கள். நாளை நள்ளிரவு நேரத்தில் நான் இருக்கும் அறைக்குத் தனியாக வந்தால் சொல்லுகிறேன்......"

"அது எப்படிச் சாத்தியம், தேவி! தாங்கள் அந்தப்புரத்தில் இருக்கிறீர்கள். நான் எப்படி அங்கே இரவில் தனியாக வர முடியும்?"

"அதே அந்தப்புர அறையிலிருந்து ஒரு நாள் நீர் யாரும் அறியாமல் தப்பித்துக் கொண்டு செல்லவில்லையா? போன வழியாகவே அங்கே திரும்பி வரலாம் அல்லவா? உமக்கு மனம் மட்டும் இருந்தால் ......"

வந்தியத் தேவனுடைய திகைப்பு இப்போது பரிபூரணமாகி விட்டது.

ஆனால் நந்தினியின் முகத்தில் எவ்வித மாறுதலும் இல்லை. எப்போதும் போலப் புன்னகை தவழ்ந்தது. (தொடரும்)



SPENCER'S
SOOTHING SYRUP
AN INVALUABLE REMEDY FOR INFANT DISORDERS
DOSE
SPENCER & CO. LTD.








## ராஜபுத்திரன்

குலப் பெருமை உடையவன் ராஜபுத்திரன். ராஜபுத்திரன் தன் தந்தையும், பாட்டனும் சொன்ன வீரம் ததும்பிய கதைகளைக் கேட்டு தன்னுடைய சமூகத்தின் மேன்மையை முற்றிலும் உணர்ந்தவன். மும்முறை முறியடிக்கப்பட்ட சித்தோர் வாசிகள் எதிரியிடம் பணிவதைவிட மகிழ்ச்சியுடன் மரணத்தை வரவேற்றதையும், பல வீரச்செயல்களின் நிகழ்ச்சிகளையும் சென்றகால நிகழ்ச்சியாக காணப்படலாம். ஆனால் இப்பண்பாடு அன்றும் இன்றும் இவர்களிடத்தில் காணப்படுகிறது.

நாங்கள் இந்தியாவின் மூலை முடுக்குகளிலுள்ள அநேகம் சமூகங்களோடு உறவாடிக் கொண்டிருக்கிறோம். அவர்கள் எங்களை நம்பியிருக்கிறார்கள். நாங்களும் அவர்களுக்கு பணி செய்வதில் பெருமை அடைகிறோம்.






# மருமகள் வந்தாள்

பிரஸிடெண்டுகள், மந்திரிகள், கெஜடட் ஆபீஸர்கள், மடாதிபதிகள், மாமியார்கள் முதலியவர்கள்தான் 'விஜயம்' செய்யலாம். என். ஜி. ஓ.க்கள், உபாத்தியாயர்கள், மாட்டுப் பெண்கள் முதலியோர் வெறுமனே வரத்தான் வேண்டும்.—இது நவீன சம்பிரதாயம்.

ஆகையால், "மருமகள் வந்தாள்" என்று தலைப்புக் கொடுத்திருக்கிறேன்.

அதிலும், கிருஷ்ணா பிக்சர்ஸின் மருமகள் வந்தவுடனே மாமியாரை அதட்டி உருட்டி "பீரோ சாவியை இப்படிக் கொடு!" என்று கேட்கிற மருமகளாக இல்லை. அடக்க ஒடுக்கத்துடன் வருகிறாள். பழைய காலத்தில் சாவித்திரி சென்ற பாதையிலே சென்று ஒரு லக்ஷ்ய மருமகளாக விளங்குகிறாள்.

சின்னஞ் சிறு வயதில், பிஞ்சு உள்ளத்தில், குழந்தை உஷாவுக்கும் பாலன் குமாருக்கும் இடையே தோன்றிய பிரேமை தடையின்றி வளர்ந்தது. உஷாவும் குமாரும் ஆரம்பப் பள்ளி வகுப்பில் படிக்கும்போதே, சிறு வீடு கட்டி விளையாடினர்; வருங்கால வாழ்க்கையில் தாங்கள் இருவரும் கணவனும் மனைவியுமாக இருக்கப் போவது பற்றிக் கனவு கண்டனர்.

உஷாவின் தகப்பனார் கிருஷ்ணசாமியும், குமாரின் தகப்பனார் ராமசாமியும் தங்கள் குழந்தைகளை வாழ்க்கைப் பாதையில் ஒருவருக்கொருவர் துணையாக இருக்கச் செய்யத் தீர்மானித்தனர்.

மனிதர்களின் தீர்மானப்படி உலகத்தில் யாவும் நடப்பதா யிருந்தால், வாழ்க்கையில் ரஸிப்பதற்கு அப்புறம் என்ன இருக்கிறது?

பட்டணத்தில் கண்டிராக்டு தொழிலில் சம்பாதிக்க விரும்பிய ராமசாமி கையில் பணம் இல்லாமல் தவித்தான். அவன் நண்பன் கிருஷ்ணசாமி தன் மனைவி ராஜம்மாளின் நகையைக் கழற்றிக் கொடுத்து அவனைப் பட்டணத்துக்கு அனுப்பினான்.

பட்டணத்தில் ராமசாமி பணம் பண்ணி விட்டான். தன் மகன் குமாரைப் பட்டணத்தில் படிக்க வைத்தான். குமார் பட்டணம் போவதைப் பார்த்து உஷாவும் பட்டணத்தில் படிக்க வேண்டும் என்று அழுதாள். கிருஷ்ணசாமி உஷாவையும் பட்டணத்துக்கு அனுப்பிப் படிக்க வைத்தான். இந்த ஏற்பாடு குமாருக்கும் உஷாவுக்கும் இடையே இருந்த அன்பு இடையறாமல் வளர்ந்து காதலாக மாற உறுதுணையா யிருந்தது.

பணம் ராமசாமியின் மனைவியைப் பலவிதத்திலும் மாற்றி விட்டது. அவள் அகம்பாவக் குன்றில் ஏறி விட்டாள். அவர்கள் மூத்த மகன் துரைக்குத் திருமணம் நடந்தது. அச் சமயம் கிருஷ்ண சாமியையும் அவன் மனைவி ராஜம்மாளையும் அவள் இழிவாகப் பேசி அவமதித்தாள். இதைக் கேட்டுக் கோபம் கொண்ட கிருஷ்ணசாமி தன் மனைவி ராஜம்மாளுடன் பந்தியிலிருந்து வெளியேறினான்.

அப்பொழுதே உஷாவுக்கு வேறு இடத்தில் மணம் செய்யத் தீர்மானித்துப் பட்டணத்தில் படித்துக் கொண்டிருந்த உஷாவை ஊருக்கு அழைத்து வந்தான் கிருஷ்ணசாமி.

கிருஷ்ணசாமி வரன் வேட்டையில் ஊருக்குப் போயிருந்த போது, உஷாவின் கல்லூரி மாணவிகளும் மாணவர்களும் கிராமத்துக்கு வந்து அவளை அழைத்துச் சென்று குமாருக்கும் அவளுக்கும் ரிஜிஸ்டர் திருமணம் செய்து வைக்கின்றனர்.

கிருஷ்ணசாமி விஷயம் தெரிந்ததும் உஷாவை நிராகரிக்கிறான்.

"இந்தக் கிருஷ்ணசாமி ஒன்றையும் சொல்லமாட்டான்; ஒன்றைச் சொல்லிவிட்டால் அதன்படி நடக்காமல் இருக்கமாட்டான்!" என்று தன்மானத்தோடு அவன் மார்தட்டிப் பேசுவது படத்தின் கடைசி



வரையில் பல்லவியாக அமைந்திருக்கிறது.

குமாரின் தமையன் துரையின் மனைவி சாந்தா ஒரு முரட்டுப் பெண்; மாமன், மாமி, கணவன் எல்லோரையும் இம்சிக்கிறாள். மனைவியின் முரட்டுச் சுபாவம் காரணமாகத் துரைக்கு வீடு கசந்து விடுகிறது; நடனக்காரி தாராவின் வீட்டிலேயே தங்க ஆரம்பிக்கிறான்.

சாந்தாவாகத் தோன்றும் லலிதா, இந்தப் படத்தில் நல்ல முக பாவங்களுடன் நன்றாய் நடித்திருக்கிறார்.

இந்தப் படத்தின் கதாநாயகி — லட்சிய மருமகளாக நடிக்கிறார் ஸ்ரீமதி பத்மினி.




ஓரகத்தி சாந்தாவின் முரட்டுச் சுபாவத்தைப் படிப்படியாக மாற்றி, அவள் கணவன் துரையையும் திருத்தி, தாராவின் வீட்டுக்கே சென்று, அவனை அழைத்து வந்து குடும்ப கௌரவத்தை நிலை நாட்டுகிறாள் உஷா.

படத்தின் ஹாஸ்யப் பகுதியை நிரப்ப ஸ்ரீ டி. ஆர். ராமச்சந்திரன், தம்முடைய பெரிய விழிகளாலும், பாட்டாலும், ஹாஸ்யப் பேச்சுக்களாலும் உதவி செய்து பரிமளிக்கச் செய்திருக்கிறார்.

சூரி என்னும் சினிமாப் பைத்தியம் (டி. ஆர். ராமச்சந்திரன்) தன் நண்பர்கள் கோஷ்டியுடன் ராமதாஸ் நாடகத்துக்கு ஒத்திகை நடத்திக் கொண்டிருக்கும்போது அவன் தந்தை வந்து அவனை அழைத்துச் செல்லும் கட்டம் எப்படிப்பட்ட சிடுமூஞ்சியையும் சிரிக்க வைத்துவிடும்.

சூரிக்குப் பெண் கொடுக்க வந்த கிருஷ்ணசாமி (உஷாவின் தந்தை)யின் எதிரில் ராமன் மாதிரி வேஷம் பூண்டு பாவத்தோடும் பாட்டோடும் சூரி நடிக்கும் காட்சி, படம் பார்த்து முடிந்த பிறகும் கூட நினைந்து நினைந்துச் சிரிக்கும்படி இருக்கிறது.

சூரியின் சினிமாக் கம்பெனியில் உஷாவின் நாத்தனார் ரூபா தெரியாத்தனமாகச் சிக்குகிறாள். அவளுக்கு நட்சத்திரப் பதவி சூட்டுப்புச் சொல்லித் தருவதாகச் சொல்லி, சூரி அவளை ஏமாற்றுகிறான். ரூபா இயற்கையின் விகார வசப்பட்டுக் கர்ப்பம் அடைகிறாள்.

உஷா இதை அறிந்து குடும்ப கௌரவத்தைக் காக்க முனைகிறாள்; தான் பிறந்தகம் போவதாகவும், ரூபாவையும் துணைக்கு அழைத்துப் போவதாகவும் சொல்லி விட்டுத் தந்திரமாக இலுப்பையூர் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச்சென்று தன் தோழி லேடி டாக்டர் உதவியால், சுகப் பிரசவம் ஆக உதவுகிறாள்.

தீர்த்த யாத்திரை போயிருந்த ராமசாமியும் அவன் மனைவியும் ஊர் வம்பிகள் மூலம், உஷா கள்ளத்தனமாகக் குழந்தை பெற்றிருப்பதாகக் கேள்வியுற்று ஓடோடியும் இலுப்பையூர் ஆஸ்பத்திரிக்கு வருகின்றனர்; உத்தமி உஷா ரூபாவைக் காட்டிக் கொடுக்க விரும்பவில்லை. அதற்குப் பலன் உஷாவின் தலையில் பழி விழுந்தது.

இது சிரமமான கட்டம். மருமகளை உயர்த்த, அவள் வாழ்வில் ஒரு ஆதர்ச நெறியைக் கற்பிக்க, இந்தக் கொடிய சோதனையைப் படப்பிடிப்பாளர் உஷாவின் தலையில் துணிந்து சுமத்தி விட்டனர்.

கத்தி முனையில் நடப்பது போன்ற அத்தகைய சங்கடமான கட்டங்களி லெல்லாம் உஷா (பத்மினி) நிதானமாகவும் உணர்ச்சியுடனும் நடித்துப் படத்தில் வெற்றி பெற்றிருக்கிறார்.

துண்டு துண்டாக நிற்கும் சம்பவங்களையும், ஒன்றோடு ஒன்று முடிச்சுப் போட்டு முடிவு கூற வேண்டிய கட்டங்களையும் ஒன்று சேர்க்க இந்த "மருமகள்" படத்தில் ஒரு மோட்டார் விபத்து வருகிறது. பயப்படாதீர்கள்! அந்த மோட்டார் விபத்து, பிரிந்த காதலர்களை ஒன்று சேர்த்து வைக்கிறது.

குமார் அமெரிக்காவில் படிப்பு முடிந்து திரும்புகிறான். உஷாவின் மீது ஏற்பட்ட களங்கத்தைக் கேள்வியுற்று, காரில் ஏறி, அசுர வேகத்தில் இலுப்பையூர் ஆஸ்பத்திரிக்கு விரைகிறான். வழியில் விபத்துக்குள்ளாகிறான். குமாரின் நிலைமையை அறிந்து குழந்தையுடன் உஷா வீட்டுக்கு வருகிறாள். மாமியார் விகவ ரூபம் எடுத்து அவளை வெளியேற்றுகிறாள். அப்பொழுது ரூபா தன் குற்றத்தை ஒப்புக் கொள்கிறாள். உஷாவின் மீது கற்பிக்கப்பட்ட மாசு நீங்குகிறது. குடும்பத்தை விளக்க வந்த குல தீபமாக உஷா போற்றப் படுகிறாள்.

மணமாகாத பெண்ணை மயக்கி, அவளை வழுக்கி விழச் செய்த சூரி, அந்தப் பெண் ரூபாவையே மணந்து கொள்ள நேருகிறது! சூரியின் தந்தையிடம் வரதக்ஷிணையாக அவளுக்குப் பிறந்த குழந்தையைத் துணியில் மறைத்து வழங்குகின்றனர்!

"மருமகள்" படத்திலிருக்கும் சிக்கலான சம்பவங்களை விளக்க ஊர் வம்பிகள் இருவர் தந்தி, தபால், டெலிபோன் இல்லாமல் செய்தி இலாக்காவின் வேலையைத் துரிதமாகச் செய்கின்றனர்!

"மருமகள்" படம்—இன்பம், துன்பம், கற்பு, வழுக்கி விழுதல், எழுந்திருத்தல், ஹாஸ்யம், சோகம், ஏக்கம், வீரம்—முதலிய பல ரஸ பாவங்களும் அடங்கிய படம்.



# விதியின் சாகஸம்

ஆர். ராஜகோபாலன்

**சேகர் சொல்லுகிறான்:**

லக்ஷ்மியும் நானும் எப்பொழுது பார்த்தாலும் சிரித்துப் பேசிக்கொண்டே யிருப்போம். இதற்குக் காரணம் என்னவென்று யாராவது கேட்டால் எனக்குப் பதில் சொல்லத் தெரியாது. இனந்தெரியாத ஒரு அன்யோன்ய பாவம், அன்புப் பிணைப்பு எங்களுக்குள் இருந்தது என்றுதான் சொல்ல முடியும். அவ்வளவுதான். நான் பி. ஏ. படித்தவன். அவளோ இப்பொழுது எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷைக்குப் போகப் போகிறாள். எனக்குப் பூர்வீக சொத்து அவ்வளவாக இல்லை. ஏதோ ஒரு வீடும் இரண்டு மூன்று ஏக்கர் நிலமும் இருந்தது. ஆனால் அவளுக்கோ அவள் செலவுக்காக எவ்வளவு பணம் வேண்டுமென்றாலும் கிடைக்கும். லக்ஷ்மியின் தகப்பனார், என் மாமாவுக்கு வேண்டிய சொத்து இருந்தது. பண விஷயத்தில் இவ்வளவு வித்தியாசம் இருந்தபோதிலும், மாமா என்னை மிகவும் நேசிக்கிறார். லக்ஷ்மியோ நான் டியூஷன் சொல்லிக் கொடுத்தால்தான் படிப்பேன் என்கிறாள்! மாமாவின் மனதுக்குள் என்ன எண்ணமோ! அவள் எந்தவிதமாகத் தன் வாழ்க்கையைப் பற்றி நினைக்கிறாளோ!

அவளுக்கு டியூஷன் சொல்லிக் கொடுப்பதென்றால் லேசான காரியமல்ல. எதையாவது கேட்டுக்கொண்டே யிருப்பாள், நானும் ஏதாவது பதில் சொல்லித்தான் தீரவேண்டும்! அவள் சிரிக்கும் அழகு, என்னை ஏன் கவர்ந்ததோ தெரியவில்லை. அவள் லைலா-மஜ்னு கதையைப் பற்றிப் பேசுவாள். அந்தக் கதையின் முடிவு அவ்வளவாகப் பிடிக்கவில்லை யென்பாள்!

"பாரசீகத்துக் கவி நமக்காகவா கதை செய்து வைத்தான், கவி இயற்றினான். காதலின் உயர்ந்த தத்துவம் வெளிவர வேண்டுமென்றால் கதை அப்படித்தான் இருக்க வேண்டும்"—என்று நான் விவாதிப்பேன். "அத்தான், இது என்ன நம்முடைய கதையா, நம் இஷ்டம்போல முடிவு செய்து கொள்ள" என்று சொல்லிக் கடகடவென்று சிரிப்பாள் அவள். அதிலே எவ்வளவோ அர்த்தம் தொனிக்கும். ஆனால் அவள் அதன் மூலம் ஒரே விஷயத்தைத்தான் குறிப்பிடுகிறாள் என்பது எனக்குத் தெரியும்; அவளுக்கும் தெரியும்.

நான் டியூஷன் சொல்லிக் கொடுக்கும் பொழுதெல்லாம் மாமி சிவகாமியம்மாள் குறுக்கிடுவாள். லக்ஷ்மி எப்படிப் படிக்கிறாள், பரீக்ஷையில் தேறுவாளா, எந்தெந்த பாடம் அவளுக்கு வரவில்லை என்றெல்லாம் கேட்பாள். இந்தக் கேள்விகளுக்கு நான் எப்படிப் பதில் சொல்வது! நன்றாகப் படிக்கிறாள்! பரீக்ஷையில் தேற அவளுக்கு வராத பாடங்களைச் சொல்லித்தரத் தானே நான் இருக்கிறேன். எனக்கு ஏற்படாத அக்கறை அவளுக்கு ஏற்பட்டு விட்டது!

அவள் பாஸ் செய்தால், அதற்குப் பிறகு கல்யாணம் என்ற பேச்சு வெளிவருமே என்று இப்பொழுது பிடித்தே ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற எண்ணம் மாமிக்கு. 'அவள் நன்றாகப் படித்துத் தேறவேண்டும், நல்ல புத்தகங்களைப் படித்து அறிவையும் விருத்தி செய்து கொள்ள வேண்டும்' என்பதெல்லாம் என்னுடைய அபிலாஷைகள்.

அன்றைக்கொரு நாள் மாமியும் மாமாவும் பின் வருமாறு பேசிக்கொண்டார்கள். அது இன்னமும் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

"சேகரைப் பற்றி நீங்கள்தான் சிலாகித்துப் பேசுகிறீர்கள்......"

"அவனைப்போன்ற குணமுள்ள பையன் அகப்பட மாட்டான் ......"

"குணம் மாத்திரம் போதுமா என்ன?"

"பணம் வேண்டுமென்கிறாயா சிவகாமி. 'பணம்' 'பணம்' என்று அடித்துக் கொள்கிறாயே, அவ

னுக்கு ஒரு வீடு இருக்கிறது. இரண்டு மூன்று ஏக்கர் நிலமும் இருக்கிறது. நமக்குப் பின் நம்முடைய சொத்து லக்ஷ்மிக்கு. அதனால் லக்ஷ்மியை அவனுக்குக் கொடுத்து விட்டால் பணமும் தானாக அவனுக்குப் போய்ச் சேருகிறது......"

"நீங்கள் கோட்டை கட்டுவதெல்லாம் இருக்கட்டும். அவன் சொத்தை அவனே விருத்தி செய்து கொள்ளாமல்......"

"சிவகாமி, அவனுக்கு ஏற்ற காலம் வரும்பொழுது அவனும் சம்பாதிப்பான். அவர்களிரு வரும் மனம் ஒப்பிப் போய் விட்டார்கள். ஆகையினால் அவள் அவனுக்குத்தான்......"

"எதற்கும் குதர்க்கவாதம் செய்தால் உங்களுடன் எப்படிப் பேசுவது!"

பேச்சு அத்துடன் நின்று விட்டது. கைலாசமய்யர்—என் மாமா—எனக்காக வாதாடுகிறார். ஆனால் மாமி குறுக்கே நிற்கிறாள். அதுவும் பணமில்லை, அந்தஸ்து இல்லை என்ற காரணத்தினால். ஆமாம், புகை கிளம்பியது, தீ எங்கிருக்கிறது என்பதையும் கண்டு கொண்டேன். லக்ஷ்மியின் வாழ்க்கையை நிர்ணயம் செய்யும் அதிகாரம் எனக்கு இல்லை. ஏன், அவளைப் பெற்றெடுத்த பெற்றோர்களுக்கு மில்லை. பின், யாருக்கிருந்தது! பணத்திற்கு இருந்தது. அந்தப் பணம் என்னிடமிருந்தால், அதை நான் சம்பாதித்து விட்டால், லக்ஷ்மி என்னுடையவள்தான். ஆனால் பணம் சேகரிப்பது எப்படி!

## கைலாசம் சொல்லுகிறார்:

இந்தக் காலத்துப் பிள்ளைகள் திடீர் சந்நியாசிகளாகி விடுவது அல்லது திடீரென்று ஏதாவது புதிர் போடுவது. அல்லது நினைத்த மாத்திரத்தில் எதையாவது நிச்சயம் செய்வது என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட பிள்ளைகள் தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால்கள் என்று சத்தியம் வேறு செய்கிறார்கள். அப்படித்தான் இருக்கிறது. சேகர் 'நான் பட்டாளத்திற்குப் போகப் போகிறேன்' என்று சொன்னதும். இருக்கிற நிலத்தைச்சரியாக கண்காணித்து வந்தால், அவனுக்குச் சாப்பாட்டுக்குக் கவலையில்லை. உள்ளூரிலேயே இருந்து ஏதாவது செய்து கொண்டிருப்பான் என்று நினைத்தால், 'பட்டாளத்தில் சேரப் போகிறேன்' என்று பிடிவாதம் செய்கிறான். அவனுக்கு லக்ஷ்மியைக் கொடுத்து நம் வீட்டோடு வைத்துக் கொள்ளலாம் என்ற எண்ணம் எனக்கு. இவன் பட்டாளத்திற்குப் போய்ச் சம்பாதித்துக் கொட்டி என்ன செய்யப் போகிறான்! யாரைக் காப்பாற்றப் போகிறான்! நானும் எவ்வளவோ சொல்லிப் பார்த்து விட்டேன், அவன் கேட்டால்தானே!

குதிரை வண்டி வந்து நின்றது. "மாமா! நான் வரும்வரை என் தாயாரை நீங்கள் தான் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டான். பட்டாளத்தில் சேர்வது, எமபுரிக்கு டிக்கட் வாங்குவது போல என்ற நினைப்பில் அவன் தாயாரான என் தங்கை அலமேலு அழ ஆரம்பித்தாள். அழுகை என்ன வேண்டி யிருக்கிறது! அவனைப் 'போய்விட்டுச் சௌக்கியமாய் வா' என்று ஆசீர்வதிக்கச் சொன்னேன். வண்டி புறப்பட்டு விட்டது. லக்ஷ்மியும் பொட்டுப் பொட்டாகக் கண்ணீர்த் துளிகளைச் சிந்திக் கொண்டு நின்றாள். சேகரின் பிரிவு அவளை அப்படிப் படுத்தி விட்டது.

அவன் ஏன் பட்டாளத்திற்குப் போக நினைத்தான் என்பது எனக்குத் தெரியும். சிவகாமியும் நானும் பேசிக் கொண்டிருந்தது, சேகருக்குத் தெரிந்து விட்டது. பணம் இல்லாத காரணத்தால், லக்ஷ்மியைக் கொடுக்கக் கூடாது என்று அவள் விவாதித்தது எல்லாம் அவனுக்குத் தெரியும். ஆனால் இதற்காகப் பட்டாளத்திற்குப் போவானேன் என்பதை மறைமுகமாக அவனுக்கு அறிவித்தேன். ஆனால் அவன் அதைப் புரிந்து கொள்ளவில்லை. நல்ல பையன்! இதற்குமேல் வயதில் பெரியவனான நான் அவனுக்கு எதைச் சொல்வது! எப்படிச் சொல்வது!

* * *

'ஸார், மணியார்டர்' என்று தபால்காரன் எத்தனையோ முறை என்னை அழைத்திருக்கிறான். எங்கிருந்து எனக்கு மணியார்டர் வரும்! சேகர் பணம்தான் வந்திருந்தது; கையெழுத்துப் போட்டு வாங்கிக் கொண்டேன். "பிள்ளையாண்டான் எங்கே யிருக்கிறான் என்பது கூடத் தெரியாமல் ஒரு உத்தியோகம். ஆனாலும் கைநிறையச் சம்பாதிக்கிறான். சீக்கிரம் வந்து லக்ஷ்மியைக் கல்யாணம் செய்து கொண்டு வாழவேண்டும்" என்பேன். இதைக் கேட்பதில் அலுமேலுவுக்குப் பரம சந்தோஷம். அப்படியே பூரித்துப் போய் விடுவாள். ஆனால் சிவகாமிக்கு எதிலும் ஒரு குறை இருக்கும். இடக்காக ஏதாவது சொல்வாள். ஏன், அவளுக்கு அவன்மேல் அத்தனை கோபமோ தெரியவில்லை!

நிலைபோகிற காரியமாக இருந்தாலும் அடுத்த வீட்டு வம்பர் மகாசபையைச் சிவகாமி மறந்ததில்லை. லக்ஷ்மி பரீக்ஷை பாஸ் செய்து விட்டு, சமையலை ஏற்றுக் கொண்டிருந்தபடியால் சிவகாமிக்குப் பொழுது போக அந்த மகா சபையை விட்டால் வேறு வழியில்லை என்றாகி விட்டது!

அன்றைக்கு என்னவோ விடுவிடென்று திரும்பி வந்த வேகத்தில், "இந்தாங்கோ" என்று என்னைக்



கூப்பிட்டாள். நான் என்னவோ ஏதோ என்று பயந்து எழுந்திருந்து போனேன்.

"ஏன்னு கண்டிராக்டர் ஸ்ரீனிவாஸன்..."

"அவனுக்கு என்ன ஆச்சு...!"

"எடுத்தவுடனேயே குதர்க்கம் ஆரம்பிச்சுட்டேளே..." என்றாள் சிவகாமி.

"சரிதான் சொல்லேன். அவன் தன்னுடைய காரைக் காலையிலும் சாயங்காலமும், குபேர பட்டணத்தில் சொத்து கொள்ளை போகிறது போல் விட்டுக் கொண்டு போகிறவனாயிற்றே! ஏதாவது 'ஆக்ஸிடன்டி'லே மாட்டிக் கொண்டு விட்டானோ என்றுதான் கேட்டேன்......"

"சரிதான், உங்க கேலி, போதுமே!"

"சரி, அவனுக்கு லக்ஷ்மியைக் கொடுத்தால் என்ன, என்றுதானே கேட்கிறே!"

'ஆமாம்' என்பதற்கடையாளமாக அவள் தலையசைத்து விட்டு, "நிறையச் சொத்து இருக்கிறது. பட்டாளத்து கண்டிராக்ட் எடுத்திருக்கானே, இல்லையோ நிறையச் சம்பாதித்துத் தள்ளுகிறான். பார்க்கிறதுக்கு நன்றாகவும் இருக்கான்" என்று சீனிவாஸனைப் பற்றிய விவரங்களை மடமடவென்று ஒப்புவித்தாள்.

"கையிலே வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு யாராவது அலைவார்களோ! இந்தக் குபேரனைவிட நம்ம சேகரே தேவலை" என்று முடிவாக நான் சொன்னேன். அவள் விடவில்லை, பேசிக் கொண்டே போனாள்!

ஊற்று ஜலத்தை ஆற்று வெள்ளமா அடித்துக் கொண்டு போகும்! லக்ஷ்மியின் சம்மதம் இல்லாமல், சீனிவாசன் எப்படி என் மாப்பிள்ளையாக முடியும் என்ற எண்ணத்தில் அவள் என்னவாகிலும் செய்து கொள்ளட்டும் என்று அவள் வழியே விட்டு விட்டேன்.

## சிவகாமி சொல்லுகிறாள் :

இந்தக் காலத்துப் பெண்கள் ஏனோ இப்படி இருக்கிறார்கள். தலை மயிரைக் கத்தரித்துக் கொண்டு திரிகிறார்கள், பௌடரை அப்பிக் கொள்கிறார்கள், இன்னமும் என்னவெல்லாம் உண்டோ அதெல்லாம் செய்து கொண்டு நாகரிகம் என்று சொல்லுகிறார்கள்! என்ன நாகரிகமோ தெரியவில்லை. கல்யாணம் என்றால், 'நான் இவனைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்' என்று அடம் பிடிக்கிறார்கள். இந்தமாதிரி அக்காலத்தில் நான் கனவு கண்டிருந்தால்கூட அது குற்றமா யிருந்திருக்குமே!

எப்படியோ, அரும்பாடு பட்டு, சீனிவாசனுக்கும் லக்ஷ்மிக்கும் கல்யாணம் செய்து வைத்துவிட வேண்டும் என்று உத்தேசித்திருக்கிறேன். அப்பாவுக்கும் பெண்ணுக்கும் இதில் கொஞ்சங் கூட இஷ்டமில்லை. என் பிடிவாதத்திற்காக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இன்று சாயங்காலம் சீனிவாசன் வரப் போகிறான். இவர்கள் என்ன செய்யப் போகிறார்களோ!

சாயங்காலம் வந்தது. பெண் பார்க்கச் சீனிவாசனும் வந்தான். நல்ல வேளை லக்ஷ்மி ஒன்றும் சொல்லாமல் டிபன் கொண்டு வைத்து, நமஸ்கரித்துவிட்டு வந்தாள். என் அதிர்ஷ்டம், அவனுக்குப் பெண் பிடித்துப் போயிற்று. லக்ஷ்மியைச் சரிக்கட்டி வைக்க வேண்டும். பிறகு என்ன! கொட்டு மேளம் கொட்ட வேண்டியதுதான்.

"பையன் எப்படி!" என்று கேட்டேன் அவளை. அவள் பதிலுக்கு, "ஷேக்ஸ்பியர் என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா, அம்மா!" என்றாள். ஷேக்ஸ்பியர் என்பவன் யாரோ, என்னவோ! எதையாவது உளறி விட்டுப் போயிருப்பான்,

இதெல்லாம் எனக்கு எதற்கு! அது பள்ளிக்கூடப் பாடமா யிருந்தால் பரீக்ஷை எழுத வைத்துக் கொள்ளட்டுமே!

"அடிபெண்ணே! நான் எதையோ கேட்கிறேன், நீ எதையோ சொல்கிறாயே!" என்றேன்.

"அதைத்தான் சொல்லுகிறேன். அழகு என்பது உடலைப் பற்றியது. பணம்கூட அப்படித்தான். பணமிருந்தால் மனிதன் அழகு செய்து கொள்ளலாம். ஆனால் இரண்டும் அழியும் தன்மையுடையவை."

"வேதாந்தம் போதும். எனக்கு வேண்டியது பதில்" என்றேன்.

"சரி, அத்தான் வரட்டும். அவன் பார்த்து யாரைக் கல்யாணம் செய்து கொள்ளச் சொல்கிறானோ அவனை......"

"இதற்கு அத்தான் என்னடி! பெற்றெடுத்தவள் என்னைவிட அவன் உனக்கு என்னடி உசத்தி! இந்த இடத்துச் சம்பந்தம் அவனுக்குக் கசக்குமா என்ன!" என்றேன்.

கடைசியில் அவளும் ஒரு வழியாக "உன் இஷ்டம்" என்று சொல்லி முடித்தாள். என் இஷ்டம் என்ன இருக்கிறது! கல்யாணம் செய்து கொள்ள வேண்டியது அவளல்லவா......இருந்தாலும் 'சரி' என்று எப்படிச் சொல்வது என்ற காரணத்தால், அவள் கூறியது சம்மதம் என்பதன் அறிகுறி என்றே எனக்குப் பட்டது.

கல்யாணம் நிச்சயிக்கப்பட்டது. என் கணவர் ஏதோ இயந்திரம்போல வேலை செய்தாரே தவிர, 'நம் பெண்ணுக்குக் கல்யாணம் செய்து வைக்கிறோம்' என்ற பூரிப்பில்லாமலே இருந்தார். அவர்தான் லக்ஷ்மியின் கட்சி யாயிற்றே! லக்ஷ்மியே 'சரி' என்று சொன்ன பிறகு அவருக்கு என்ன!

பந்தல் போட்டாயிற்று. முறுக்கு சுற்றியாகி விட்டது. ஆனால் கல்யாணத்திற்கு முந்தைய தினம் காலை லக்ஷ்மி என் தலையில் கல்லைப் போட்டு விட்டு எங்கேயோ போய்விட்டாள். என் மனசு நிம்மதிப் படவில்லை! என் கணவர் அவள் எழுதிப் போட்டு விட்டுப் போயிருந்த கடிதத்தை எடுத்துப் படித்தார்:

"எனக்குப் பிடிக்காத கல்யாணத்தை ஏற்பாடு செய்ததினால், நான் ஊரை விட்டுப் போகிறேன். தற்கொலை செய்து கொள்வதற்கல்ல. ஏதாவது ஜீவனம் தேடிக் கொண்டு வாழ்வேன். என்னை யாரும் தேட வேண்டாம். தேடினாலும் அகப்பட மாட்டேன். ஆனால் நிச்சயமாக இன்னும் சிறிது காலத்திற்குள் திரும்பி வந்து விடுவேன்-லக்ஷ்மி."

இதைக் கேட்டதும் எனக்குச் சொல்லமாட்டாத துக்கம் தொண்டையை அடைத்தது.

## சேகர் சொல்லுகிறான் :

ஊரை விட்டு வந்தேனே தவிர, என் மனம் எப்பொழுதும் ஊரிலேயேதான் சஞ்சரித்துக் கொண்டிருந்தது. லக்ஷ்மியின் அதிர்ஷ்டமோ என்னமோ, எனக்குப் பதவி கிடுகிடுவென உயர்ந்து வந்தது. சிறிது காலத்திற்கெல்லாம் என் ஆபீஸ் விஷயங்களைக் கவனித்துக் கொள்ள உதவியாக ஒரு பஞ்சாபி மாது வந்தாள். பாவம், வாழ்க்கை என்பது எல்லோரையும் எப்படி உலுப்பித் தள்ளுகிறது. என்னவோ தெரியவில்லை. என்னிடம் அவள் - சரளா - அன்பும் பரிவும் காட்டினாள்.

அருகிலிருந்த ஏரியில் ஒரு நாள் படகோட்டிக் கொண்டு சென்றேன். அவளும் கூடவே இருந்தாள். ஆனால் அப்பொழுது லக்ஷ்மி என்னுடன்

இருந்திருந்தால்......இப்படித்தான் என் மனம் எப்பொழுது பார்த்தாலும் அவனையே சுற்றிச் சுற்றி நின்றது. ஏதாவது பேச வேண்டுமே என்று அவளைப் பார்த்து, "உங்கள் நாட்டில் ஸ்திரீகள் வேலை செய்வது இழிவாகக் கருதப்படவில்லையா!" என்றேன்.

"ஏன் ஆண்கள் வேலை செய்யும்பொழுது ஸ்திரீகள் வேலை செய்யக்கூடாதா என்ன!"

"அதற்குச் சொல்லவில்லை. நீங்களெல்லாரும் படித்து விட்டால், உத்தியோகம் பார்க்க வேண்டுமென்று நினைக்கிறீர்கள். இதைவிட உயர்ந்த காரியம் உங்களால் முடியும் என்ற எண்ணமாவது இருக்கிறதோ என்று தெரிந்து கொள்ளவே கேட்டேன்!"

"இந்தப் படிப்பு வேலை செய்யத்தானே எல்லோரையும் தயாரிக்கிறது."

"பதில் தெரியாவிட்டால் படிப்பு மீது பாரத்தைப் போடுங்கள். ஏன் கணவனுக்கேற்ற நல்ல மனைவியாக இருக்க முடியாதா......!"

"ஆமாம்......" என்று கூறி எதையோ மென்று விழுங்கினாள் அவள். 'சட்'டென்று என் கையைப் பற்றினாள். அந்த ஸ்பரிசம் என்னைச் சிலிர்க்கச் செய்தது. என் அந்தரங்கத்தை அறிய முயற்சித்தாளா! என் மனம்தான் முன்பே அபகரிக்கப்பட்டு விட்டதே!

சில நாளைக்கெல்லாம் என்னைச் சுமந்து கொண்டு பட்டாளத்து ரெயில் இனம் தெரியாத காட்டிற்குள்ளெல்லாம் நுழைந்து சென்றது. எனக்கு எங்கேயோ மாற்றலாகியிருக்கிறது என்பது தான் எனக்குத் தெரியும். என்னுடன் சரளாவும் மாற்றப்பட்டாள். என்னவோ தெரியவில்லை, எனக்குத் தலையை வலிக்க ஆரம்பித்தது. தைலத்தை எடுத்துப் பூசிக் கொண்டேன்.

"சாதாரணத் தலைவலி யோசனைகளாலும், கவலைகளாலும் ஏற்படுகிறது. அப்படி என்ன கவலையும் யோசனையும் உங்களுக்கு ஏற்பட்டதென்று எனக்குப் புரியவில்லை" என்றாள்.

"எதைப் பற்றியோ நினைத்தேன்......"

"என்னுடைய வாழ்க்கையைப் போலவா உங்கள் வாழ்க்கை! சிந்தித்து, மண்டையை உடைத்துக் கொண்டு ஏதாவது முடிவு காண..."

"அப்படியானால்......"

"என்னை எடுத்துக் கொள்ளுங்கள். எனக்கு விவாகமாகி ஒரு மாதத்திற்குள்ளே என் கணவருக்கு ஒரு விபத்தின் காரணமாகக் கண்கள் போய் விட்டன. எனவே நான் சம்பாதிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. என் இரு தங்கைகளை வேறு நான் காப்பாற்ற வேண்டும்..."

"உன் கணவருக்குக் கண்கள் போய்விட்டதா!"

"ஆமாம்."

"அப்படியானால்...... !"

நான் எதற்காக இழுத்தவாறே கேட்டேன் என்பது புரிந்திருக்க வேண்டும் அவளுக்கு. அவளுக்குக் கல்யாணமாகிவிட்டதென்றால், எனக்குப் பிடிக்காத வழிகளெல்லாம் அவள் கடந்து கொண்டாளே அது எதைக் குறிக்கிறது! என் மனம் ஏற்கெனவே இன்னொரு இடத்தில் சரண் புகுந்து விட்டது என்பதையும், அதனாலேயே நான் கடல் கடந்து வாசம் செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறதென்பதையும் அவளுக்கு எடுத்துச் சொல்ல எத்தனை தரம் நினைத்தேன், முயற்சி செய்தேன்! அதற்கான சிறு துளி தைரியம் கூட என்னிடம் இல்லையே! இத்தனை நாளும் காத்திருந்த அந்தச் சந்தர்ப்பம் இப்பொழுது எனக்கு வாய்த்ததே. அதை நழுவ விட்டுவிட முடியுமா! ஆகவே என் கதையை அவளிடம் கூறினேன்.

அவள் புன்னகையுடன், "உங்களை என் அண்ணாவாக மதித்திருக்கிறேன். வேறெந்த பாவமும் என்னிடம் இல்லை" என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னாள். என் மனதிலிருந்த ஒரு பெரிய பாரம் இறங்கியது.

"ஆனால் சரளா! நான் உனக்கு அண்ணாவாக இருக்கத் தகுதியுள்ளவன்தானா!"

"உலகம் என்னவென்று உங்களுக்குத் தெரியாது போலிருக்கிறது. நானும் எத்தனையோ பேரிடம் பழகியிருக்கிறேன். கல்யாணமான புதிதிலிருந்தேதான் வேலை செய்ய ஆரம்பித்து விட்டேனே. அத்தனை பேரும் என்னிடமிருந்து சகோதரி பாவத்தையா எதிர்பார்த்தார்கள்! ஆனால் உங்கள் அன்பு என்னை ஆட்கொண்டுவிட்டது. என்னை ஒரு சகோதரியென்றே மதித்து வந்தீர்கள். அதனால்தான் உங்களிடம் எனக்கு அன்பு, வாத்ஸல்யம் எல்லாம்!" என்றாள்.

"அப்படியானால் நீ எனக்குச் சகோதரி இல்லாத குறையைத் தீர்த்து விட்டாய்" என்றேன், என் மனதிலுள்ள சந்தோஷத்தில். அவள் பூரித்துப் போனாள். நானும் லக்ஷ்மியைப் பற்றி எல்லாவற்றையும் அவளிடம் சொன்னேன். ஆர்வத்துடன் கேட்ட அவள், "அண்ணியைப் பார்க்கவேண்டும் போலிருக்கிறது" என்றாள்.

வண்டி நின்றது. கமாண்டர் உத்தரவு வந்தது; நானும் அவளும் இறங்கி நடந்தோம். வண்டியேறிய பொழுது இல்லாத மன அமைதி இப்பொழுது என்னிடம் இருந்தது. அவளைப் பார்க்கப் பார்க்க எனக்கு இப்பொழுது இரக்கம் தான் அதிகரித்தது. நான் ஒரு லட்சியத்துடன் பட்டாளத்தில் சேர்ந்தேனென்றால், அவளும் ஒரு லட்சியத்துடன் வாழ்க்கையின் சலனங்களால் உந்தப்பட்டு வந்திருக்கிறாள்!

## லட்சுமி சொல்லுகிறாள் :

கல்யாணத்திற்கு முதல் தினம் கடிதத்தை எழுதி வைத்து விட்டு ஓடி வந்தேனென்று உலகம் சொல்லும். ஆனால் நான் அப்படி நினைக்கவில்லை. என் லக்ஷ்யக் கோட்டை என்ன ஆவது என்ற எண்ணத்தில்தான் ஓடி வந்தேன். ஊரை விட்டு வந்துவிட்டேன். ஆனால் எங்கே தங்குவது என்ற பிரச்னை எழவே, தூரத்து உறவினர் ஒருவர் வீட்டிற்குப் போனேன். ஆனால் அவர்களோ என் கல்யாணத்தைப் பற்றி விசாரித்தார்கள்! மாப்பிள்ளையாகப் போகிறவர் ஏதோ ஒரு குற்றத்திற்காக அரசாங்க விருந்தாளியாக ஜெயிலில் உட்கார்ந்திருப்பதாக ஒரு பொய்யைச் சொன்னேன். ஆனால் என்ன ஆச்சரியம்! பத்திரிகைச் செய்தியொன்றும் அப்படியே கூறியது.

"உள்ளூர் கண்டிராக்டரான சீனிவாசன் அரசாங்கத்தை ஏமாற்றும் நோக்கத்துடன் சில தில்லுமுல்லு வேலைகள் செய்ததினால், அவருடைய விமான நிலையம் கட்டும் "காண்டிராக்ட்" ரத்து செய்யப்பட்டதோடன்றி, அவரைச் சிறையிலுமடைத்திருக்கிறார்கள். கல்யாணம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த முந்தைய நாள் இது நடந்தது. இதனால் மணப்பெண் அவமானம் தாங்க முடியாமல் ஊரைவிட்டு ஓடிப்போய் விட்டாளாம்."

முதலில் என் மனசு சீனிவாசனுக்காக அனுதாபப்படத்தான் செய்தது. பாவம்! ஆனால் என்ன செய்வது! விதி யென்று ஒன்று அவரைக் கம்பி எண்ண வைக்கும் பொழுது, கல்யாணம் நடக்கக் கூடிய விஷயமா! அதே விதி என் பக்கத்தில் எனக்குச் சாதகமாக வேலை செய்யும் பொழுது அவர் என்னை மணந்து கொள்ள முடியுமா!

இனி மேலும் அக்ரஹார வாசம் இருக்க வேண்டிய நிலைமை இல்லாமல் போகவே, நான் மறுபடியும் ஊர் போய்ச் சேர்ந்தேன்.

என் தாயார் என்னை இருமடங்கு சந்தோஷத்தோடு வரவேற்றாள். முதலாவதாக நான் திரும்பி வந்தது; இரண்டாவதாக ஜெயிலுக்குப் போனவன் மனைவியாக இல்லாமல் தப்பித்துச் சென்றது. என்னை வியந்து கொண்டாள். அதில் ஒரு ஆச்சரியம் என்னவென்றால், "ஊர் பேர் தெரியாதவர்களுக்குச் சேகர் எவ்வளவோ தேவலை" என்று தீர்மானித்து, என் தாயார் என்னைச் சேகருக்கே மணம் செய்து கொடுப்பதாகத் திருந்திய மனத்துடன் சொன்னதுதான்!

## சேகர் சொல்லுகிறான் :

நான்கு வருஷகாலம் ராணுவத்தில் வேலை செய்துவிட்டுத் திரும்பினால், ஊரில் எத்தனை மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஒரு மாறுதலைப் பார்த்தபோது, ஊரில் ஏற்பட்டுள்ள மற்ற மாறுதல்கள் கால் துட்டுக்குப் பெறாது என்று நினைக்கச் செய்கிறது. ஆம், மாமியிடம் கண்ட மாறுதலைத்தான் சொல்லுகிறேன். "பணம், என்னப்பா பணம்! பணம் இன்றைக்கு வரும் நாளைக்குப் போகும். குணம் அல்லவா மனுஷனுக்கு வேண்டியது! உன்னைப் போன்ற குணவானைக் கணவனாகப் பெற லக்ஷ்மி புண்ணியம் செய்திருக்க வேண்டும்" என்றாள் என் மாமி.

மாமியின் மன மாறுதலைப் பற்றி என்னுடன் ஊருக்கு வந்திருந்த சரளாவிடம் கூறினேன்.

"இதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது! எல்லாம் விதியின் சாகசம்!" என்றாள் சரளா.

இந்தச் சமயத்தில் "அக்கா! ஆபீஸ் காரியம் நடக்கிறதா! நான் உள்ளே வரலாமோ!" என்று புன்முறுவலுடன் கேட்டாள் லக்ஷ்மி.

ஏறக்குறைய 40 ஆண்டுகளுக்கு முன் சகோதரி ஆர். எஸ். சுப்புலக்ஷ்மியவர்களால் மாதர்களிடையே கல்வி பரப்பும் தொண்டு ஆரம்பிக்கப்பட்டது. அத்தொண்டின் ஒரு பகுதியாக சாரதா மாதர் சங்கம் நீண்டகாலமாக நடந்து வருகிறது. இச்சங்கத்தின் கட்டிடத் திறப்பு விழா தியாகராஜ நகரில் ராஜாஜி அவர்களின் தலைமையில் பிப்ரவரி மாதம் 14உ நடைபெற்றது. கட்டிடத்தை ராஜாஜி திறந்து வைத்த பிறகு சாரதா வித்யாலயத்தின் மாணவிகளால் சங்கீதம், நாட்டியம், நாடகம் முதலிய கதம்ப நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அந்த நிகழ்ச்சிகளைப் பார்த்து மகிழ்ந்த சபையின் முன்னணியில் ராஜாஜி அவர்களையும், ஸ்ரீமதி அல்லாடி கிருஷ்ணசாமி ஐயரையும், சகோதரி சுப்புலக்ஷ்மி அம்மாளையும், டாக்டர் முத்துலக்ஷ்மி அம்மாளையும் காணலாம்.

சென்ற ஆண்டில் பவநகர் ராஜாவின் முன்னிலையில் பரத நாட்டியக் கச்சேரி நடத்தி மேற்படி சாரதா மாதர் சங்கத்துக்கு நிதி வசூலித்துக் கொடுத்து உதவிய குமாரி சித்திரலேகாவைப் படத்தின் மேலேயுள்ள வட்டத்தில் காணலாம்.



# வட்ட மேஜை

## ராஜாஜி என்ன சொன்னார்?

நவாப் ராஜமாணிக்கம் கம்பெனியின் 'சம்பூரண ராமாயணம்' நாடகத்தைத் துவக்கி வைக்கும்போது ராஜாஜி கூறிய சில வார்த்தைகள் சில வட்டாரங்களில் குழப்பத்தை உண்டாக்கியிருக்கின்றன.

"நடிகர் டி. கே. சண்முகம் இங்கே இருக்கிறார். அவர் இந்தச் சம்பூரண ராமாயண நாடகத்தைப் பார்த்துப் பாராட்டும்படி நாடகம் இருக்கும் என்று நம்புகிறேன். அவர் பார்த்துப் பாராட்டினால் நான் பாராட்டியதற்கு மேலே என்று வைத்துக் கொள்ளுங்கள்" என்று ராஜாஜி கூறியதாகத் தினப் பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது.

இது நவாப் ராஜமாணிக்கத்தின் அன்பர்கள் சிலருக்கு வருத்தம் அளித்திருக்கிறது. "நவாப் ராஜமாணிக்கம் நாடகக் கலைத்துறையில் எவ்வளவு அநுபவம் உள்ளவர்! எவ்வளவு சிறந்த நடிகர்! அவருடைய நாடகத்துக்கு டி. கே. சண்முகம் சர்ட்டிபிகேட் கொடுக்க வேண்டுமா! ராஜாஜி இப்படிச் சொல்லி விட்டாரே!" என்று நவாபின் அன்பர்கள் வருத்தப் படுகிறார்கள். "தமிழ் நாட்டு நாடக மேடையின் சரித்திரமும் தற்போதைய நிலைமையும் தெரியாதபடியால் ராஜாஜி அவ்விதம் சொல்லியிருக்கலாம்" என்று சிலர் சமாதானமும் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

"ஔவை சண்முகம் எவ்வளவு சிறந்த நடிகராயிருந்தபோதிலும் அவர் தமது நாடகக் கம்பெனியைக் கலைக்க வேண்டியதாகி விட்டது. வேறு எந்த நாடகக் கம்பெனியும் தமிழ் நாட்டில் நிலைத்து நடைபெறவில்லை. நவாப் ராஜமாணிக்கம் ஒருவர்தான் விடாப்பிடியாக எவ்வளவோ கஷ்ட நஷ்டங்களுக் கிடையில் கம்பெனி நடத்தி வருகிறார். அதிலும் நாஸ்திகப் பிரசாரம் பரவி வரும் இந்த நாளில் பக்திமயமான நாடகங்களையே நடத்தி வருகிறார். அத்தகையவருக்கு இன்னொரு நடிகரின் சர்ட்டிபிகேட் எதற்கு!" என்று இன்னும் சிலர் கேட்கிறார்கள்.

ராஜாஜி நமது தமிழ் நாடக மேடையின் தற்கால நிலைமையை அறிந்து சொன்னாரா, அறியாமல் சொன்னாரா என்பதை நாம் சொல்ல முடியாது.

ஆனால் பெரியவர்களின் வாக்கில் உண்மை வராமற் போகாது. அந்த உண்மையில் ஆழ்ந்த கருத்துக்கள் குடிகொண்டிருக்கும் என்பதும் நிச்சயம்.

நவாப் ராஜமாணிக்கத்தின் நாடகத்தை ஔவை சண்முகம் பாராட்ட வேண்டும் என்று ராஜாஜி சொன்னதினால், ராஜமாணிக்கத்தைக் காட்டிலும் சண்முகம் சிறந்த கலைஞர் என்று குறிப்பிட்டதாகக் கருதுவது பெருந் தவறு.

வள்ளுவர் குறளைச் சங்கப் புலவர்கள் ஒப்புக் கொள்ள வேண்டுமென்று முயற்சி செய்த படியால், வள்ளுவரைக் காட்டிலும் சங்கப் புலவர்கள் உயர்ந்தவர்கள் என்று அர்த்தமில்லை.

கம்பருடைய ராமாயணத்தை ஒட்டக் கூத்தர் ஒப்புக் கொண்டு பாராட்டினார் என்று கூறினால், கம்பரைக் காட்டிலும் ஒட்டக் கூத்தர் பெரிய கவிஞர் என்று கூறியதாகாது.

கலைத் துறையில் பொறாமையும் துவேஷமும் மிக அதிகம் என்பது உலகம் அறிந்த உண்மை. ஒரே கலைத் துறையில் ஈடுபட்டவர்களில் ஒருவரை மற்றொருவர் பாராட்டுவதற்கு நிச்சயம் மதிப்பு உண்டு. ஆகையால் நவாப் ராஜமாணிக்கத்தின் நாடகத்துக்கு அதே துறையில் உள்ள ஸ்ரீ டி. கே. சண்முகம் வந்திருந்ததை ராஜாஜி தமது பேச்சில் பாராட்டியது இயல்பே யாகும்.

அதுமட்டுமல்ல. ராஜாஜியின் வார்த்தைகளில் இன்னொரு கருத்தும் அடங்கியிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது.

ஔவை டி. கே. சண்முகம் நடிப்புக் கலையில் மிகச் சிறந்தவர்; பொதுத் தொண்டுகளில் ஆர்வம் கொண்டவர். அவையெல்லாம் உண்மையே.

ஆனால் ஸ்ரீ டி. கே. சண்முகம் அவர்களைப் பாதி நாஸ்திகர் என்றும், முக்கால் திராவிடக் கழகத்தினர் என்றும், முக்காலே அரைக்கால் கம்யூனிஸ்டு என்று கருதுகிறவர்களும் இருக்கிறார்கள். கம்யூனிஸ்டு கட்சியார் நடத்திய போலிச் சமாதான மகாநாட்டு நாடகத்தில் அவர் ஈடுபட்டிருந்தார் என்பது ராஜாஜிக்கும் தெரிந்த விஷயமே.

ஆகையால், ராஜாஜி அவர்கள் கூறிய வார்த்தைகளின் உட்கருத்து, "நான் ராமாயணத்தில் மிக்க பக்தியுள்ளவன். ஆகையால் நான் ராமாயண நாடகத்தைப் பாராட்டுவது முக்கியமல்ல. ஸ்ரீ டி. கே. சண்முகம் பாராட்டுவதுதான் முக்கியம். ஏனெனில் அதன் மூலம் அவர் பூரண ஆஸ்திகராக மாறக்கூடும்!" என்பதாக இருக்கலாம் அல்லவா! "இராமாயணத்தைப் போன்ற பக்தி ரஸம் வாய்ந்த நாடகங்களை ஸ்ரீ டி. கே. சண்முகம் நடத்த வேண்டும்" என்ற விருப்பத்தையும் ராஜாஜி தம் வார்த்தைகளின் மூலம் வெளியிட்டிருக்கலாம் அல்லவா!

சென்னை
21—2—53 "கலைஞன்"

[ஆசிரியர் குறிப்பு:—ராஜாஜி கூறிய வார்த்தைகளின் உட்கருத்து எதுவாயிருந்தபோதிலும், அவற்றுக்கு மேற்கண்ட வியாக்யானம் ரஸமாக இருப்பதால் வெளியிட்டிருக்கிறோம்.]

* * *

## பழையாறை

நாங்கள் "பொன்னியின் செல்வ"னால் தமிழ் பேசும் மக்கள் எல்லாரும் அறிந்துள்ள சரித்திரப் பிரசித்தி பெற்ற பழையாறைக்குச் சென்றோம்.

வண்டி செல்லவும் வசதியற்ற சேறு பொருந்திய பாதையின் வழியே சென்று அச்சமுடன் ஆற்றையும் கடந்தே கடந்து அம் மாட்சிமை மிக்க இடத்தை யடைந்தோம். வழியில் இராஜ கோபுரத்தின் தோற்றம் மனத்தை வருத்தியது. அதன் முன் இருந்த வீட்டில் உதவி கோரினோம். அவர்களே மேற் பார்வையாளராக இருந்தமையால் மெய் காப்பாளனை வருவித்து 'ஹரிக்கேன்' விளக்கு, 'டார்ச்' விளக்கு முதலியவற்றுடன் சுவாமி தரிசனம் செய்யப் புறப்பட்டோம்.

கோவிலின் அமைப்பு எவ்வளவு தூரம் மனத்தைக் கவர்ந்ததோ அவ்வளவு அதன் இலமுற்ற தோற்றம் துயரத்தைத் தந்தது. பிரகாரங்கள் இடிந்து விட்டமையால் பரிவார மூர்த்திகள் மண்டபத்தில் ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. எண்ணெய் அபிஷேகமின்றி உள்ள சிலைகள் கலையழகு சொட்டி எம்மைச் சொக்க வைத்தன.

புறத்தே இடிந்த மண்டபம் இருந்த அடையாளமுள்ள வெளியில் ஓர் ஒப்பற்ற கருங்கற் சிலை காணப்படுகிறது. சூரிய பகவானே அதன் அழகைக் கண் இமைக்காது பார்த்து வருகிறான். அவன் என்று அச் சிலையைப் பிறர் ரசிக்கா வண்ணம் பொடி யாக்குவானோ! தஞ்சைப் பெரிய

கோயிலைக் கவனிக்கும் அரசாங்க புதை பொருள் ஆராய்ச்சி இலாகா, பழையாறை வடதளியை அவசியம் கவனிக்க வேண்டும். இன்றேல் தமிழ னின் கலைக் கோயிலொன்று மண்ணோடு மண் ணாய் விடும் என்பது திண்ணம்.

புதிய கோவில் எழுப்பும் பக்த சிகாமணிகளும், கலைக்கூடங்கள் அமைக்கும் ரசிகர்களும் இப் பழம் பெரும் பதியைக் காக்க ஆவன செய்வார்களா!

இந்து மத அறநிலையப் பாதுகாப்புக் குழுவின ரேனும் இந்தச் சரித்திரப் புகழ்பெற்ற ஆலயத் தைப் பாதுகாக்க ஏற்பாடு செய்யக் கூடாதா!

ஊர்காவற்றுறை, இலங்கை — ஆ. சபாரத்தினம்
20—1—53

* * *

## தமிழ் வேந்தர்களின் தருமங்கள்

தங்கள் 15-2-53 இதழில் "மறைந்த ஆலயம் எழுந்தது" என்ற கட்டுரையைப் பார்த்தேன். 'தர்மமும் தெய்வீக ஸ்தாபனங்களும் சிரஞ்சீவித் தன்மை வாய்ந்தவை. அவற்றை யாராலும் அழிக்க முடியாது. ஒருவேளை சில கொடிய மூர்க்கர்களின் நாச வேலைகள் காரணமாக அவை தாற்காலிகமாக மறைந்தாலும் மீண்டும் அவை உயிர் பெற்றுவிடும் என்பதில் சந்தேகம் இல்லை' என ஆரம்பித்திருப்பது அக்ஷரலக்ஷம் பெறும். இது சம்பந்தமாய்ச் சிதம்பரத்தில் நடந்து கொண்டு வருகிற ஒரு சம்பவத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் சிதம்பரம் கடைத்தெருவுக்கு அம்பலநாயகப் பெருந் தெரு என பெயர். அங்கு திருநாவுக்கரசு நாயனார் பெய ரில் ஓர் பெரு மடம் அரசன் கட்டி வைத்தான் என்று கல்வெட்டு கூறுகின்றது.

மூன்றாம் குலோத்துங்கன் (கி. பி. 1178—1218) காலத்தில் சிதம்பரம் மேல வீதிக்கு முடித்தலை கொண்ட பெருமாள் திருவீதி எனப் பெயரிட்டு அறப் பெருஞ் செல்விச் சாலை என்னும் சத் திரத்தை நிறுவினான். விநாயகர் — சுப்ரமண்யர் கோவில் ஒன்றும் கட்டி வைத்தான்.

தருமபுர ஆதீனத்தின் 24-வது மகா சந்நிதானம் ஆக்ஞைப்படி வித்வான் ச. தண்டபாணி தேசிகர் எழுதிய சிதம்பரம் என்ற நூல் வாயிலாக மேலே குறிப்பிட்ட கோவில், சத்திரம் இவை பற்றி உள்ள குறிப்புகளைக் கொண்டு ஆராயப் புக, தற் காலம் அவைகள் கடந்த சுமார் 75 வருட கால மாகப் பிற மதஸ்தர் ஒருவர் கையில் இருந்து வரு வது தெரிய வந்தது. மேற்படி கோவிலில் இருந்த விக்ரகங்களும் நகர மக்களின் முயற்சியால் கண்டு பிடித்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

தமிழ் வேந்தர்களால் ஏற்படுத்தப்பட்ட தர்மங் களையும் கோவிலையும் மீண்டும் உபயோகமாக்க ஓர் சங்கமும் நிறுவி ஆவன செய்ய முயற்சி எடுத் திருக்கிறார்கள் தில்லைவாசிகள்.

சங்கத்தாரின் முயற்சியுடனும், தில்லைவாசி களின் ஒத்துழைப்புடனும் சிரஞ்சீவித் தன்மை பெற்ற மேலே குறிப்பிட்டுள்ள தெய்வீக தர்ம ஸ்தாபனங்கள் மீண்டும் ஏற்படும் நன்னாள் சமீ பிக்க, குலோத்துங்க சோழ விநாயக சுப்ரமண்யர் சங்கத்தாருக்கும் தில்லைவாசிகளுக்கும் அருள் புரியப் பிரார்த்திக்கிறேன்.

சிதம்பரம்
16—2—53 — ஏ. கே. அருணாசலம்

# படித்துப் பாருங்கள்

## புனர்மிலன் (*ஹிந்தி நாவல்*)

தமிழில் பல ஹிந்திக் கதைகள் வந்திருக் கின்றன. இவற்றையெல்லாம் படித்து மகிழ்ந்த தமிழர்களுக்கு, வட நாட்டாரின் வாழ்க்கை முறை, பழக்க வழக்கங்கள் நன்கு அறிமுகமாகி யிருக்கின்றன. இப்பொழுது வட நாட்டவர்கள், நம்முடைய பழக்க வழக்கங்களும், வாழ்க்கை ... அறிய ஒரு சந்தர்ப்பம் வாய்த்

... வந்து, புஸ்தகத்தை ஒரு முறை தொட்டால், கடைசிப் பக்கம் படித்து முடிக்கும் வரை கீழே வைக்க முடியாமல் செய்து விடுகின்றன.

ஆசிரியர்: சாவி; பிரசுரம்: ஸ்டார் பிரசுரம், திருவல்லிக்கேணி, சென்னை - 5. விலை: ரூ. 1-12-0.

## அணுவில் தாண்டவம்

சில நாட்களுக்கு முன்பு வரைகூட, 'விஞ்ஞா னத்தைத் தமிழில் சொல்ல ...

ராஜாவுக்கும் கௌசல்யாவுக்கும் ரொம்ப நேசம். ராஜாவின் தூண்டுதல் காரணமாக, நித்தியானந்தம் அந்தப் பெண்ணைச் சம்பளம் இல்லாமல் பள்ளிக்கூடத்தில் சேர்த்தார்; தாமே புத்தகங்கள் வாங்கிக் கொடுத்தார்.

கௌசல்யா மிகவும் அக்கறையோடு படித்தாள். தாங்க முடியாத தன் குடும்ப வறுமை நிலையிலும், படிப்பில் உள்ள ஆர்வம் அவளிடம் குறையவே இல்லை.

கௌசல்யாவின் அகன்ற கரிய பெரிய விழிகளும் சுருண்ட கூந்தலும் அவளுக்கு விசேஷக் கவர்ச்சியைக் கொடுத்தன.

"ராஜா, என்னை அந்தப் பையன் மிரட்டுகிறான். அடிக்கடி என்னைப் பார்த்து அழகு காட்டுகிறான்!" என்பாள் கௌசல்யா. இதைச் சொல்லி முடிப்பதற்குள் அவளுடைய கண்கள் கண்ணீரைக் கக்கி, ராஜாவின் மனசையும் கலக்கி விடும். அவ்வளவு தான். ராஜா, அந்தப் பையன் யாராயிருந்தாலும் அவனைத் தண்டிக்காமல் விட மாட்டான்.

ராஜா கௌசல்யாவுக்கு ஒரு மெய் காப்பாளனாக இருந்தான்; வகுப்பில் சக மாணவனா யிருந்தான்; விளையாட்டில் தோழனா யிருந்தான்; வகுப்பு முடிந்த பிறகு உபாத்தியாயரா யிருந்தான்; அவள் பள்ளிக்கூடம் விட்டு வீட்டுக்குப் போகும்



பார்த்துப் பேசுகிறேன். நம்மிடம் இத்தனை அன்பா யிருக்கும் அவனை நாம் அறிந்து கொள்ள வேண்டாமா?" என்றாள் அவனுடைய அருமைத் தாயார்.

மறு நாள், வழக்கம் போல் கௌசல் யாவை அவன் வீட்டு வாசலில்

# உலகம் முழுவதும் 24 மணியில் !



அதிக பாதுகாப்பும் உழைப்பும அளிக்கவே

## Firestone டயர்கள்

இம்முறைகளில் பரிசோதனை செய்யப்பட்டு அளிக்கப்படுகின்றன.



டயர்கள் பந்தோபஸ்தாகவும் நீடித்து உழைக்கவும் தகுதி யுள்ளனவா வென்பதை பயர்ஸ்டோனின் பரிசோதனை போர்டார் டயர்களை 25,000 மைல்களுக்கு மேலாக—அதாவது பூமத்தியரேகை வழியாக பூமியின் சுற்றளவுள்ள அத்தனை மைல்கள்—ஓடவிட்டுப் பரிசோதனை செய்கின்றனர். நேர்த்தியான ரஸ்தாக்களிலும் கரடுமுரடான சாலைகளிலும் மேடு பள்ளமான ரோடுகளிலும் மணிக்கு 60 மைல் வேகத்தில் செலுத்தி உங்கள் பாதுகாப்புக்கும் நீண்ட உழைப்புக்கும் பயர்ஸ்டோன் டயர்களே சிறந்தவை என்று நிரூபிக்கப் படுகின்றது.

இந்தச் சோதனைகள் மட்டுமின்றி, ரஸாயன ஆராய்ச்சிக் கூடங்களின் முடிவுகளும், சென்ற 29 ஆண்டுகளாக 'இண்டியனாபொலிஸ் ஸ்பீட்வே'யில் இடைவிடாது பெற்ற வெற்றியே பயர்ஸ்டோன் டயர்கள் இன்று சிறந்தவை; நாளை அதை விடச் சிறந்தவை என்பதை பறையறைந்து வருகின்றன.

**தி பயர்ஸ்டோன் டயர் அண்டு ரப்பர் கம்பெனி ஆப் இந்தியா லிட்., பம்பாய்**

# மணமகன் கிடைத்தான்

கூடகம்

“இண்டர் பாஸ் செய்து, சங்கீதம், ஹிந்தி, வீட்டு வேலைகளில் தேர்ச்சியுள்ள பெண்ணுக்கு மணமகன் தேவை. விவரங்களுக்குத் தபால் பெட்டி நெம்பர் 9999 C/o. ‘அதிசயம்,’ சென்னை” என்ற விளம்பரத்தைக் கண்ட ரங்கராஜன் உள்ளத்தில் ஒரு வித உணர்ச்சி நெளிந்தது. இதைப் போன்ற ஆயிரமாயிரம் விளம்பரங்களைப் படித்துப் படித்து அலுத்துப் போயிருந்த அவனுக்கு இன்று மட்டும் ஏனோ, அதைப் பற்றியே சிந்தித்துப் பார்க்கத் தோன்றியது.

அந்த விளம்பரத்துக்குப் பதில் எழுதினான். தன் தாய்க்கு இது தெரிய வேண்டாம் என்று தன் விலாசத்தை, தன் நண்பன் வீட்டு விலாசத்துக்குக் கொடுத்திருந்தான். கடிதத்தைத் தபாலில் சேர்த்து விட்டு வந்த பின்தான் அவனுக்கு நிம்மதி ஏற்பட்டது.

“என்ன இருந்தாலும், பக்கத்து வீட்டு நளினாவுக்கு இத்தனை செருக்கு வேண்டியதில்லை. யார்தான் அவளை வந்து கல்யாணம் செய்து கொள்ளப் போகிறான்? அதைத்தான் பார்ப்போமே” என்று எண்ணியவனாய் அவன் வீட்டையடைந்தான்.

அன்றிரவு அவனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. அவன் நினைவு எல்லாம் அந்தக் கர்வி நளினாவைச் சுற்றியே வளைய, வளைய வந்து கொண்டிருந்தது. “அவசரப்பட்டு அந்த விளம்பரத்துக்குப் பதில் போட்டிருக்கக் கூடாது” என்று ஒரு சமயம் அவன் எண்ணம் ஓடும். மறுகணம் “பக்கத்து வீட்டு நளினாவினால் எனக்கு என்ன பிரயோஜனம்? அவளுக்கு வரன் பார்க்க ஏற்பாடுகள் நடப்பதாகத்தான் தெரிகிறது. நான் ஒருவன் இருப்பது அவர்கள் கண்ணில் படவில்லையே! போகட்டுமே. இந்த நளினா இல்லாவிட்டால், வேறு நளினா எனக்குக் கிடைக்காமலா போகிறாள்?” என்று நினைத்துப் பார்த்தான் ரங்கராஜன். அவளைக் கண்டால், ஓடி ஒடிப் பதுங்கும் நளினாவின் மேல் ஆத்திரமும், ஒரு வித வெறுப்பும்தான் ஏற்பட்டது.

* * *

அவர்கள் பக்கத்து வீட்டில் குடியேறிய அன்றே, ரங்கராஜன் மனத்தைப் பறித்துக் கொண்டிருந்தாள் நளினா. அவன் படித்த காலேஜில்தான், அவளும் படித்தாள். ஆனால் ஒரு முறை கூட அவளை அவன் ஏறெடுத்துப் பார்த்ததில்லை. என்றாகிலும் ஒரு நாள் அவள் பாடசம்பந்தமான சந்தேகம் கேட்டுப்போகத் தன்னிடம் வருவாள் என்று அவன் எதிர்

அவள் கேட்கிறாள் என்று வாங்கிப் போவான். அவளும் சளைக்கவில்லை. தன்னிடமிருந்த புத்தகங்களைக் கொடுத்தனுப்பினான். அவளும் சளைக்காமல் படித்துத் தீர்த்தாள். மேலும் மேலும் புத்தகங்கள் கேட்டு அனுப்பினாள். நண்பர்களிடமிருந்த புத்தகங்களையெல்லாம் இரவலாக வாங்கி வந்து அவன் கொடுத்தான். தன்னிடமிருந்த காசுகளையெல்லாம் கொட்டி, புதுப் புத்தகங்களாக வேறு வாங்கியனுப்பினான். என்ன பிரயோஜனம்? மரியாதைக்கு “நன்றி” என்று ஒரு வார்த்தை எழுதியனுப்பியிருக்கக் கூடாதா? அவனுக்கு அலுப்பும் சலிப்பும்தான் உண்டாகியது. வேலையில்லாமல், தெருப் பக்கம் வருவதையே நிறுத்திக் கொண்டான். வேறு புத்தகங்கள் எதுவுமில்லை என்று கையை விரித்து விட்டான். இந்த ஏமாற்றம் அவளால் சகிக்க முடியவில்லை. அவளைப் பற்றி அவன் மறக்கத் தலைப்பட்டான்.

ரங்கராஜன் தந்தையை இழந்தவன். தாயிருந்தாள். நிறையச் சொத்துமிருந்தது. பெற்றோர்களுக்கு ஒரே பிள்ளை. செல்லப் பிள்ளை. அவன் படிப்பிலும் நல்ல சுட்டிகை.

அவன் கல்லூரிப் படிப்பு முடிவடைந்ததும், அவனுக்குக் கல்யாணம் பண்ணி, மரு



ஜவுளிக் கடைக்காரன்:—நீங்கள் வாங்கிக் கொண்டு போன சட்டைத் துணி நன்றாய் இருந்ததா?

வாடிக்கைக்காரர்:—ஓ. ரொம்ப நன்றாயிருந்தது! என் பிள்ளைகள் எல்லோரும் அதைப் போட்டுக் கொண்டார்கள்!

ஜவுளிக்கடைக்காரர் (ஆச்சரியத்துடன்):- அது எப்படி, ஸார்!

வாடிக்கைக்காரர்:—மூத்த பையனுக்கு அந்தத் துணியில் சட்டை தைத்தேன்! அது லாண்டிரிக்குப் போய்விட்டு வந்த

மகளும், பின்னையுமாகப் பார்க்க வேண்டுமென்று அவன் தாய் மீனாட்சி விரும்பினாள்.

அதற்கேற்ப, பக்கத்து வீட்டில் குடி வந்திருந்த சுந்தரத்தின் மகள் நளினா கண்ணுக்கு அழகாய், பாந்தமா யிருந்தது அவள் மனத்துக்குப் பிடித்துப் போயிருந்தது. மீனாட்சி அடிக்கடி அவர்கள் வீட்டுக்குப் போய்ப் பேசி விட்டு வருவாள். நளினாவின் தாயும் சில சமயங்களில் மீனாட்சியின் வீட்டுக்கு வந்திருந்து விட்டுப் போவாள். நளினாவும் ஒருநாள் தன் தாயுடன் வருவாள் என்று ரங்கராஜன் எண்ணியதுண்டு. அவன்தான் அசடோ, அவன்தான் அசடோ ரங்கராஜன் எண்ணியபடி ஏதும் நடக்கவில்லை.

தன்னிடம் நளினாவுக்கு அந்த 'அன்பு' இருக்கிறதா என்பதை வெளிப்படையாக, சந்தேகமற அறிந்து கொள்ளத்தான் அவன் அத்தனை தூரம் பிரயத்தனப்பட்டான்.

ஒரு நாள், மீனாட்சி மகனைப் பார்த்து, "அப்பா, உன் படிப்பு இன்னும் இரண்டொரு மாதத்தில் முடிந்து விடும். என் மூச்சிருக்கும்போதே, உனக்குக் கல்யாணம் செய்து விட்டால், என் கவலை விட்டது. நானும் நிம்மதியாகக் கண்ணை மூடுவேன். பக்கத்து வீட்டு நளினாவை உனக்குப் பிடித்திருக்கிறதா? நல்ல பெண்! என்ன சமர்த்து! நன்றாய்ப் பாடுகிறாள். உனக்குப் பிடித்திருந்தால், அவர்களும் சம்மதித்தால், நளினாவையே உனக்குப் பெண் பார்த்து விடலாம். என்ன சொல்கிறாய்?" என்று அவள் தன் மனத்தில் உள்ளதை மூச்சுவிடக் கூட நேரமில்லாமல் சொல்லி முடித்தாள்.



"அம்மா, நீ சொல்றது சரியில்லை. நாமாகப் போவதும் நல்லதில்லை. அந்தப் பெண்ணின் மிடுக்கையும் செருக்கையும் பார்த்தாலே எனக்குப் பிடிக்கவில்லை. அவள் கர்வி போலிருக்கிறது. அவர்களாக வந்தால் பிறகு பார்த்துக் கொள்வோம். ஒன்றும் அவசரமில்லை" என்று ரங்கராஜன் தன் தாயின் ஆவலை அடக்கும் வகையில் பதில் சொன்னான். அவர்கள் எல்லாருமே கர்வம் பிடித்தவர்கள் என்று அபிப்பிராயம் அவனுக்கு.

பரீட்சை முடிந்து, முடிவும் வெளியாகியது. ரங்கராஜன் பி. ஏ. படித்து முடித்து விட்டான். நளினாவும் தேறியிருந்தாள்.

அப்பொழுதுதான் நளினாவின் பெற்றோர்கள், பெண் கல்யாணத்தைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டதாகத் தெரிந்தது. மீனாட்சி ஒரு வார்த்தை தன் மகனைப் பற்றி அவர்கள் கேட்க மாட்டார்களா என்று ஏங்கினாள். அவ்வளவு தூரம் நளினா அவளுக்குப் பிடித்துப் போயிருந்தாள்.

"பார்த்தாயா, அம்மா, நாமாகப் பெண் கேட்கப் போயிருந்தால், எவ்வளவு மானக்கேடாகப் போயிருக்கும். நீ வாயை மூடிக் கொண்டு சும்மா யிரு, போதும்!" என்று ரங்கராஜன் தன் தாயாரிடம் சொன்னான்.

இந்தச் சமயத்தில்தான் அவன் பத்திரிகையில் வந்திருந்த விவாக விளம்பரத்தைக் கண்டதும் கடிதம் எழுதியதும்.

ஒரு வாரத்துக்குப் பிறகு, அவன் நண்பன் தன் வீட்டு விலாசத்துக்கு ரங்கராஜனுக்கு வந்திருந்த கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போனான். அவன் கடிதத்தைப் பிரித்துப் படித்தான். அவன் கண்களை அவனால் நம்ப முடியவில்லை. ஒரே ஆச்சரியத்தில் மூழ்கிப் போனான் அவன்.

அந்த விளம்பரம் கொடுத்தவர் வேறு யாருமில்லை. அவன் பக்கத்து வீட்டில் குடியிருந்த நளினாவின் தந்தைதான் அவர். அவன் வாயை மூடிக் கொண்டு அந்தக் கடிதத்துக்குப் பதில் எழுதாமலே யிருந்து விட்டான்.

இப்படி இரண்டு மூன்று நாட்கள் கழிந்தன.

மீனாட்சி மகனைப் பார்த்து, "ஒரு வேடிக்கை பார்த்தாயடா! நமக்கு, நளினாவைக் கொள்ள இஷ்டமிருக்குமோ

நீ கொடுத்திருந்த விலாசத்துக்கு எழுதினார்களாம். இன்றைக்குப் பக்கத்து வீட்டு மாமி கதை கதையாய்ச் சொன்னாள். எனக்கு அவமானமாய்ப் போச்சு!'' என்று சொன்னாள்.

''என்னம்மா. இதில் அவமானம்? பெண்ணைப் பெற்றவர்களுக்கு விளம்பரம் கொடுக்க எவ்வளவு உரிமையிருக்கிறதோ, அவ்வளவு உரிமை பெண்ணைக் கொள்கிறவர்களுக்கும் இருக்கிறது. இதோ பார் அவர்கள் எழுதிய கடிதத்தை. நான் பதில் போடவில்லை. பெண் வீடும், பிள்ளை வீடும் தெரிந்து போய் விட்டது. இனிமேல் ஆக வேண்டியதற்கு அவர்கள் பொறுப்பு. நீ சும்மாயிரு'' என்று ரங்கராஜன் மீனாட்சிக்குச் சொன்னான்.

மறுநாளே மீனாட்சி கனிஷ்வின் வீட்டுக்குப் போனபோது, அவர்கள் அவன் சம்மதம், அவன் பிள்ளை சம்மதம் என்ன என்பதைக் கேட்டார்கள்.

''காதமா, தூரமா? பக்கத்திலேதானே இருக்கிறான்! வந்து கேட்டு விடுங்களேன்'' என்று சொல்லி விட்டு மீனாட்சி வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.



டாக்டர்: உங்களுக்கும் என் நண்பன் தாமோதரத்தைப் போலவேதான் வியாதி வந்திருக்கிறது. எல்லாவற்றுக்கும் மனக் கவலைதான் காரணம். அவரும் உங்களைப் போலவேதான் மன வேதனையினால் சிரமப்










எம்மொழியிலும் **விஸ்டம்** கேட்பது விவே
கமாகும் — அது நீடித்து உழைக்கும், சரி
யான வடிவமுள்ள நைலன் டுத் ப்ரஷ்

*In any language, it's wise to ask*
*for WISDOM — the long-lasting,*
*correct-shape nylon toothbrush.*

ఏ భాషలోనైనా 'విజ్‌డమ్' అని అడగటం
వివేకమైనది. చిరకాలం మను సరైన ఆకారంగల
ప్లాస్టిక్ పండ్ల కుంచె.






சம்பந்தம்

அன்று முழுவதும் அவள் மனம் ஆனந்தக் கடலாடியது.

இந்தனை நாட்களாக எத்தனை எத்தனையோ பெண்களைப் பார்த்துவிட்டு, அவரவர்களுக்கு ஒரு குறையைச் சொல்லி 'வேண்டாம்' என்று மறுதளித்து வந்த அதே சுந்தரம்தான் அன்று புஷ்பாவைப் பார்க்க வந்திருந்தான். பளிச்சென்ற முகத்துடன் அவன் ஜம்மென்று நாற்காலியில் வந்து அமர்ந்த பொழுதே புஷ்பா தன் அறையிலிருந்து பார்த்து விட்டாள். அப்பொழுதே அவள் தலையை இலேசாக மேலும் கீழுமாக ஆட்டிக் கொண்டாள்.

பிறகு பூர்வாங்கமாய்ப் பெண் பார்க்கும் படலம் நடந்தது. புஷ்பா தன் அம்மாவின் மேற்பார்வையில் வழக்கப்படி நமஸ்கரித்தெழுந்தாள். பிறகு பாடினாள். பலகாரம் பரிமாறிக் காப்பியும் ஆற்றிக் கொடுத்தாள்.

சுந்தரம் அவைகளை ரொம்பவும் ரஸித்தான். மேல் படிப்பு படித்த பையன், அவனுக்கென்ன வெட்கம்! கலகல வென்று சிரித்துப் பேசிக் கொண்டிருந்தான்.

புஷ்பாவின் பெற்றோர்கள் பையனுக்குப் பெண் பிடித்துவிட்டதென்று அப்பொழுதே ஒருவாறு ஊகித்துக் கொண்டார்கள். கல்லூரியில் அந்த வருஷங்கூட அழகுப் போட்டியில் முதற் பரிசு பெற்றவள் புஷ்பாதான் என்றால் பிறகு கேட்பானேன்!

வந்த காரியத்தை முடித்துக் கொண்டு வந்தவர்கள் புறப்பட்டார்கள். சுந்தரம் அந்த வீட்டை விட்டுப் பிரியா விடை பெற்றுச் சென்றான்.

போகும்பொழுது 'அதற்கென்ன இந்த மாதக் கடைசியிலேயே முகூர்த்தம் வைத்துக் கொண்டால் போகிறது' என்று ஜாடையாகச் சொல்லி விட்டுப் போகவே, புஷ்பாவின் பெற்றோர்களுக்கு அளவற்ற ஆனந்தம்.

"புஷ்பா அதிர்ஷ்டக்காரிதான்!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே வந்தவள், அங்கு புஷ்பாவைக் காணாமல் திகைத்துப் போனாள், புஷ்பாவின் தாயார். "புஷ்பா! புஷ்பா!" என்று ஆவலாய்க் கூப்பிட்டுக் கொண்டே அறையை எட்டிப் பார்த்தாள். அங்கு அவள் நாற்காலியில் கால்மேல் கால் போட்டுக் கொண்டு பதில் குரல் கொடுக்காமல் அமர்ந்திருப்பதைப் பார்த்து விட்டு, "என்ன புஷ்பா இது! ஏன்?" என்று அவளை அன்புடன் அணைத்துக் கொண்டாள். ஒரே பெண்; செல்லப் பெண் அல்லவா!

"எனக்கு அந்த மாப்பிள்ளை கொஞ்சங் கூடப் பிடிக்கவில்லை, அம்மா!"

"என்னடி உளறுகிறாய்?" என்று சற்றுக் குரலை உயர்த்தினாள் அம்மா.

"ஆமாம்; நான் அவனைக் கலியாணம் செய்து கொள்ள முடியாது!"

"இப்படியும் உண்டா! உனக்கென்ன அப்பா சுயம்வரமா ஏற்பாடு செய்யப் போகிறார்?" என்று கேட்டாள் தாயார்.

"அது என்னவோ, நீ போ அம்மா!" என்றெழுந்தாள் புஷ்பா. 'லல்லல்லா ல்லல்லா' என்று பாடிக்கொண்டே மேஜை மேலிருந்த சில புத்தகங்களை எடுத்துக் கொண்டு தன் பிரிய சகி சுஜாதா வீட்டுக்குப் புறப்பட்டு விட்டாள் புஷ்பா.

"அது, சரி! புஷ்பாவுக்குப் பிடிக்கவில்லையென்றால் நாம்தான் என்ன செய்கிறதாம்? நிர்ப்பந்தப் படுத்தி அவள் வாழ்க்கையைக் குட்டிச் சுவராக்குகிறதா, என்ன!" என்று அவள் அப்பா அப்படியே அப்பட்டமாக அவர்களுக்கு எழுதிவிட்டார்.

மாப்பிள்ளை வீட்டாருக்கு இது ஒரு எதிர்பாராத ஏமாற்றம்.

மறு நாள் கல்லூரியில் புஷ்பாவுக்குப் பெண்கள் பகுதியில் பிரமாதமான வரவேற்பு கிடைத்தது. அதற்குள் அவர்களுக்கு விஷயம் எப்படித்தான் எட்டிற்றோ! "சரியான

பெண்ணடி நீ! நம் பெண் குலத்தின் பெருமையையே காப்பாற்றி விட்டாய்!'' என்று அனைவரும் அவளைச் சூழ்ந்துகொண்டு கொண்டு போற்றிப் புகழ்ந்தார்கள்.

"எனக்கென்னவோ அவன் பிடிக்கவில்லை; வேண்டாமென்று சொல்லி விட்டேன்!'' என்று கூறி கலகலவென சிரித்தாள்.

அன்று, நாள் முழுவதும் ஒரே குஷியான பேச்சுதான். புஷ்பாவின் தோள்களை அடிக்கடி அவர்கள் குலுக்கிக் குலுக்கிப் பேசினதால் அவளுக்கு இலேசான வலி கூட ஏற்பட்டிருந்தது. இருந்தும் அந்தக் குஷியில் அவள் அதை உணரவே யில்லை.

சாதாரண நாட்களிலேயே புஷ்பா ஒரு மாதிரி. இந்த புகழ் வார்த்தைகளுக்கு அப்புறம் கேட்க வேண்டுமா! தன் தலையை ஒரே அடியாய் நிமிர்த்திக் கொண்டு விட்டாள். நாளுக்கு நாள், 'பெண்கள் ஆண்களை மணந்து கொண்டுதான் ஆகவேண்டுமோ' என்ற தீவிரப் பிரச்னையில்கூட இறங்கி விட்டாள்.

இந்த நிகழ்ச்சிக் கப்புறம் கல்லூரி மாணவிகள் புஷ்பாவின் பேச்சுக்குப் போவதே யில்லை. 'அவளிடம் பேச்சுக் கொடுப்பானேன்! பிறகு அவள் சொல்வதை வாங்கிக் கட்டிக்கொண்டு வருத்தப்பட்டுக் கொள்வானேன்' என்றிருந்து விட்டார்கள்.

ஸார், செய்யட்டும்!'' என்று தன் சக ஆபீசர்களிடத்திலெல்லாம் மிகவும் பெருமையாகப் பேசிக் கொண்டார். அவர்களும் 'அது சரி! அது சரி!'' என்று தலையைப் பலமாய் ஆட்டி வைத்தார்கள்.

நாளுக்கு நாள் புஷ்பாவுக்குப் புதுப் புது சிநேகிதங்க ளெல்லாம் கிடைத்துக் கொண்டிருந்தன. வெவ்வேறு கல்லூரி மாணவிகள் கூட அவளிடம் வலிய வந்து பழகிக் கொண்டார்கள். எங்கேயாகிலும் பத்துப் பெண்கள் கும்பலாய்ப் பல்லை இளித்துக் கொண்டு பேசிக்கொண் டிருந்தார்க ளென்றால், அங்கு அவசியம் புஷ்பா இருப்பாள்.

அவளுடைய புகழ் அத்தனை சீக்கிரத்தில் எங்கும் பரவியது.

அன்று, வழக்கப்படி புஷ்பா, தன் நீண்ட பின்னல்க ளிரண்டும் முன்னால் மார்பில் வந்து புரள இரு இலைகளும் ஒரு மலருமான ரோஜாக் கொத்தைத் தலையில் அழகுறச் செருகிக் கொண்டு ஒய்யாரமாய் நடந்து கல்லூரிக்குச் சென்று கொண்டிருந்தாள். அவளுடைய ஜார்ஜெட் புடவை அடிக்கடி தோளிலிருந்து சரிந்து விழுவதுகூட ஒரு 'பாஷ'னாகத்தா னிருந்தது.

மெல்லிய ராகம் ஒன்றை மனதோடு

யது புஷ்பாவுக்கு. சட்டென விபிர்த்தாள். அப்பொழுதுதான் தபாற்காரனும் அவளைத் தேடி வந்து ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுச் சென்றான்.

என்ன ஆச்சரியம்! அதுவும் அவளுக்கு யாரோ எழுதின ஒரு காதற் கடிதம்! தலை சுழன்றது புஷ்பாவுக்கு. இன்னது செய்வ தென்றே விளங்காமல் சற்று நேரம் கல்லாய்ச் சமைந்து கிடந்தாள். பிறகு 'எதற்கும் இருக் கட்டும்' என்று பிரின்ஸிபாலிடம் சென்று அந்தக் காதற் கடிதத்தைக் கொடுத்தாள். அவர் வாங்கிக்கொண்டு அவளை அனுப்பினார்.

உடனே ஆங்காங்கு சுவரில் எழுதி யிருந்ததை யெல்லாம் அழிப்பதற்கு ஏற்பாடு செய்து விட்டு, அந்தந்த ஆசிரியர்களையும் அழைப்பித்தார் பிரின்ஸிபால். அந்தக் காதற் கடிதத்தைக் காட்டி அவரவர் வகுப்பு மாண வன் கையெழுத்துக்கு ஏதாவது ஒத்திருக்குமா என்று பார்க்கவும் சொன்னார்.

கனவேகத்தில் அக் காதற் கடிதம் எங்கும் விளம்பரமானதுதான் மிச்சம். அதை எழு தினவர் யாரென்று கண்டு பிடிக்கவே முடிய வில்லை. 'இப்பேர்ப்பட்ட மாணவன் நம் கல் லூரிக்கே லாயக் கில்லாதவன். உடனே அவன் கல்லூரியை விட்டு வெளியேறட்டும்' என்று நோட்டீஸ் போர்டில் கூட எழுதி ஒட் டினார் பிரின்ஸிபால். பிரயோஜனம்!

அன்று புஷ்பா, சோகத்தில் தோய்ந்து உருமாறித் தன் வீட்டிற்குத் திரும்பினாள். அதற்குள் இச் செய்தி அவள் வீட்டிற்கு எப்படித்தான் எட்டிற்றோ! புஷ்பாவைக் கண்டதும் அவள் அம்மா தலை தலையாய் அடித்துக் கொண்டாள். புஷ்பாவின் கண் களிலும் நீர் வழிந்தது. அவளைக் கையைப் பிடித்து அருகிலிழுத்து "ஏண்டி புஷ்பா, ஏதோ ஒன்றை மனத்தில் வைத்துக் கொண்டு தானே, அன்று அந்த மாப்பிள்ளை வேண்டா மென்று சொன்னாய்?" என்று சற்று உரக் கவே கேட்டாள் அம்மா. "ஆ! நீ கூட என்னைச் சந்தேகிக்கிறாயா அம்மா!" என்று

புஷ்பாவின் மேல் அனுதாபமாக ஊரில் ஒருவர் பேச வேண்டுமே! ஊஹூம். அனை வரும் அவளைத்தான் குற்றவாளி யாக்கிக் கூண்டில் ஏற்றிக் கொண்டிருந்தார்கள்.

மறு நாளிலிருந்தே புஷ்பா கல்லூரிக்குப் போவதை நிறுத்திக் கொண்டு விட்டாள். பாவம், இன்னும் ஒரே வருஷம் வாசித்தால் பி. ஏ. முடித்திருப்பாள்!

ஊரில் அவரவர்கள் பேசிக் கொள்வதை யும், ஆபீஸில் பேசிக் கொள்வதையும் புஷ்பா வின் அப்பாவால் காது கொடுத்துக் கேட்க முடியவில்லை. பைத்தியமே பிடித்துவிடும் போலிருந்தது. ஒரு மாதம் லீவு போட்டு விட்டு அவரும் வீட்டிலேயே உட்கார்ந்து விட்டார். அவருக்கோ இரண்டு மூன்று வருஷங்களாக 'சிரிநீவு' நோய் கண்டிருந் தது. அதோடு இப்பொழுது முதுகில் ஒரு சிறு கட்டி யேற்பட்டு அவரைப் படுக்க வைத்து விட்டது. கடைசியில் அந்தக் கட் டியை ஆபரேஷன் செய்யப் போக அவர் இறந்து விட்டார். என்ன செய்வது!

நன்றாய்ப் பகையாய் நிகு நிகு வென்று செழுமையுடனிருந்த குடும்பம், இப்படி அதி சீக்கிரத்தில் தரை மட்டமாகு மென்று யார் தான் எண்ணினார்கள்!

நாட்கள், வாரங்கள், மாதங்கள், வரு ஷங்கள் என்று ஒன்றன் பின் ஒன்றாக வெகு வேகமாய் ஓடிக் கொண்டிருந்தன புஷ்பா வீட்டோடு இருந்து கொண்டே ஐக்



தாறு குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக்கொண்டு காலங்கழித்து வந்தாள். கலியாணத்துக்காக அவளைப் பார்க்க யாரும் முன் வரவில்லை. அப்படி ஒருவர் இருவர் வந்தவர்கள் கூட, அண்டை அயலில் எதையோ கேள்விப்பட்டு விட்டு ஓடியே போய் விட்டார்கள். பாவம்! அபலை புஷ்பா நித்ய கன்னியாகவேதான் இருந்து கொண்டிருந்தாள். அவளோடு கூட வாசித்த பெண்களெல்லாருக்கும், ஒவ்வொருவராகக் கலியாணம் நடந்து கொண்டே யிருந்தது. அவரவர்கள் திருமணப் பத்திரிகைதான் புஷ்பாவுக்குத் தவறாமல் வந்துக் கொண்டிருந்ததே! அவைகளைப் படிக்கும் பொழுதெல்லாம், ஆழ்ந்த எண்ணங்களுக்கிடையே நீண்ட பெருமூச்சு விட்டுக் கொள்வாள் புஷ்பா.

அந்த மாதக் கடைசியில், எப்பொழுதோ புஷ்பா சிறுமியாயிருந்த பொழுது சிங்கப்பூர் சென்று குடியேறின அவள் மாமா அப்பொழுது தான் தன் குடும்ப சகிதமாகச் சுற்றத்தார்களைப் பார்த்துவிட்டுப் போக வந்திருந்தார். புஷ்பாவின் அம்மாதான் திருமணத்தைப் பற்றி ரொம்பவும் முறையிட்டுக் கொண்டாள். 'அதற்கென்ன நான் முடித்து வைக்கிறேன். சிங்கப்பூரில் பொன்னுசாமி எனக்குத் தெரிந்த பையன். பெரிய உத்தியோகத்திலிருக்கிறான். கலியாண வயதை எப்பொழுதோ தாண்டினவன். இருந்தாலும் புஷ்பாவின் வயதுக்கு ஒத்துப்போகும்' என்று சொல்லி அன்றைய தினமே புஷ்பாவின் போட்டோவை விமானத் தபால் மூலம் அவனுக்கு அனுப்பியும் வைத்தார். அடுத்த தபாலிலேயே அவனிடமிருந்து பெண் பிடித்து விட்டதென்று பதில் வந்துவிட்டது. யாவருக்கும் தாங்கொணாச் சந்தோஷம். மாமா சீக்கிரத்திலேயே புஷ்பாவைக் அழைத்துக் கொண்டு சிங்கப்பூருக்குத் திரும்பிவிட்டார்.

புஷ்பாவின் இருண்ட வாழ்க்கை சற்றுப் பல பல வென்று விடிய ஆரம்பித்தது.

அவளை நேரில் கண்டதும், புஷ்பாவின் அழகில் அப்படியே சொக்கிப் போனான் பொன்னுசாமி. 'கண்டதுங் காதல்' என்ற கதையாகிற்று.

மறு நாளுக்கு மறுநாளே பொன்னுசாமிக்கும் புஷ்பாவுக்கும் வெகு விமரிசையாய்த் திருமணம் நடந்தது. ஆகா! அந்தக் கலியாணத்திற்கு வந்து குவிந்த வெகுமதிகளையும் வாழ்த்துச் செய்திகளையும் சொல்ல வேண்டுமே!

அதற்கடுத்த நாள் தன் உத்தியோக

பொழுது அவர்கள் புஷ்பாவைப் போன்ற பெண் கிடைத்தது பற்றி அவன் அதிருஷ்டக்காரன் என்று பொன்னுசாமியிடமே வாய் விட்டுச் சொல்லிச் சென்றார்கள். அப் புகழ் மொழிகளைக் கேட்கக் கேட்க, இவ்வுலகமே ஒரு இன்பக் காட்சியாக தோன்றியது அவனுக்கு.

தன் ஆபீஸ் லீவு முடிகிறவரை புஷ்பாவை அழைத்துக் கொண்டு எங்கெங்கேயோ அதி நூதன இடத்திற்கெல்லாம் உல்லாசப் பிரயாணம் சென்று வந்தான் பொன்னுசாமி. புஷ்பா மிகவும் சந்தோஷமா யிருந்தாள்.

அன்றுதான் லீவு முடிந்தது. பொன்னுசாமி ஆபீசுக்குப் புறப்பட அறையினுள் உடுத்திக் கொண்டிருந்தான். புஷ்பா, மணம் மிகுந்த காப்பியை ஆற்றிக் கொண்டே அறையினுள் நுழைந்தாள். அங்கு மாட்டியிருந்த அப் பெரிய போட்டோவைப் பார்த்ததும் அப்படியே காப்பியுங் கையுமாகத் திகைத்து நின்றுவிட்டாள். "அந்தப் படத்தில் உங்களோடிருக்கும் மற்றொருவர் யார்?" என்று பரபரப்புடன் அவள் வாய் கேட்டது.

"அவனா! என் ஆத்ம நண்பன் சுந்தரம். நாங்களிருவரும் ஈருடல் ஒருயிர் மாதிரி. இப்பொழுது அவன் டில்லி மத்திய அரசாங்கத்தில் பெரிய உத்தியோகத்தில் இருக்கிறான். அவன் உதவியால் தான் எனக்கும் இந்த உத்தியோகம் கிடைத்தது. ஒரு தடவை பார்த்துக்கோ, அவன் எங்கேயோ பெண் பார்க்கப் போய், அவளையே பிடிக்கவில்லையென்று சொல்லி விட்டானாம் அந்தப் பேதைப் பெண். சற்று வருத்தமாய் என்னிடம் சொன்னான் அதை. 'உம், இதற்காகவா வருத்தப்படுகிறாய்? அப்பேர்ப்பட்ட பெண்ணின் வாழ்க்கையை அடியோடு குட்டிச் சுவராக்கி விடுகிறேன் பாருடா!' என்று கிளம்பினேன். இரவோடு இரவாய் அவள் வாசித்த கல்லூரியில் நுழைந்து அவள் பெயர்கூட என்னவோ மறந்து போச்சு! அவளைப் பற்றி அவதூறான வார்த்தைகளையெல்லாம் சுவரில் எழுதிவிட்டு வந்தேன். அவள் விலாசத்துக்கு ஒரு காதற் கடிதமும் எழுதிப் போட்டேன். சுந்தரம்கூட "ச்சு ச்சு. பாவம்! அப்படி யெல்லாம் ஏண்டா செய்தே?" என்று அந்தப் பெண்ணின் மேல் பச்சாத்தாபப் பட்டுக் கொண்டான். அதற்கு மறு நாள் கப்பலேறி வந்தவன்தான், இங்கேயே தங்கி விட்டேன்.

"[illegible]

## முதன்மை ஸ்தானம் — நம் புராதன கௌரவம்

பல நூற்றாண்டுகளின் இடைவிடா முயற்சியின் பயனாக இந்தியக்கொல்லர்கள் உயர்ந்த ரக எஃகு தயாரிப்பதின் நுட்பத்தை அறிந்து கொண்டார்கள். இதனுடன் சேர்ந்து கொண்டன, இத்திறமை மிக்க தொழிலாளிகளின் பிரபலமான அற்புத வேலைப்பாடுகள். அறிவு மிகுந்து திறன்படைத்த இவ்விந்தியத் தொழிலாளிகளால் உருவாக்கப்பட்ட உறுதியானதும், அழகின் சிகரமானதுமான பொருள்கள் இந்தியக்கப்பல்களில் நாகரிகம் படைத்த பல வெளிநாட்டு வியாபாரஸ்தலங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டன

உலகத்தின் மற்ற எந்த பாகங்களிலும் 19ம் நூற்றாண்டு வரையிலும் செய்யப்படாத ஓர் உருவாக்கப்பட்ட இரும்புத் தூண் இந்தியாவில் கி.பி. 415ம் ஆண்டிலேயே செய்யப்படும் அளவிற்கு இந்திய எஃகுத்தொழில் அபிவிருத்தியும் மேன்மையும் அடைந்திருந்தது. இக்காலத்திய விஞ்ஞான சாஸ்திரிகளும், யந்திர நிபுணர்களும் திகைக்கும்படியாக தொழில் உலகத்தில் மிக்க மேம்பாட்டுடனும், தயாரிக்கப்பட்ட இந்த ஸ்தம்பம் குமாரகுப்தனால் எழுப்பப்பட்டது. 23 அடி உயரமுள்ள இதன் எடை 6 டன்கள்.



புத்தி கூர்மையாலும், விடா முயற்சியாலும் தூண்டப்பட்ட இவ்விந்தியத் தொழிலானது மேன்மேலும் வளர்ந்தோங்கி வருகிறது. இவ்விந்திய மறுமலர்ச்சியில் டாடாவுக்கு ஓர் இன்றியமையாத பங்கு

டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பனி லிமிடெட்

TN 3014

விட்டு இட்டிலியை வாங்கிக் கொண்டு தன் வீட்டை நோக்கிப் புறப்பட்டாள் பர்வதம்.

கண்ணம்மா நெஞ்சிலே சூட்டுக்கோல் சுட்டது. அவள் அரும்பாடு பட்டு மறக்க முயற்சித்துக் கொண்டிருந்த சம்பவங்களின் நினைவு அலைகள் மெல்ல மெல்ல அவள் மனக் கரையிலே மோதிச் சிதறின. எல்லோரும் இட்டிலி வாங்கிக் கொண்டு போய் விட்டார்கள். அடுக்களையில் ஒரு வித சூன்யம் நிலவியது. ஆனால் கண்ணம்மாளின் உள்ளத்தில் பர்வதம் முறித்துப் போட்டு விட்டுப் போன துரும்பு மலையாக உருப்பெற்று உறுத்திக் கொண்டிருந்தது.

" இனிமேல் என்னதான் பிள்ளையின்மேல் அன்பைச் சொரிந்தாலும், உலகத்தின் கண்களுக்கு முன்னால் நான் ஒரு கொடியவள்தான். பெற்ற பிள்ளையை, பச்சைப் பாலகனைப் பழுக்கக் காய்ந்த இரும்புக் கோலால் சூடுபோட்ட வளல்லவா! அந்த வடுவை நான் மறந்தாலும்—மறக்க முடிந்தாலும் உலகம் எப்படி மறக்கும்!"

இமை கொட்டாமல் பிரமை பிடித்தவளைப் போல வெறும் சுவரை வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றாள் கண்ணம்மாள். அவள் கண்களின் இமை

இந்த அறுபது வயது வாழ்க்கைப் பயணத்தில் எத்தனையோ இன்ப துன்பங்களை அனுபவித்துப் பண்பட்டுப் போன இருதய முடையவள் அவள். ஆனால் கண்ணம்மாளுக்கோ கணவனை இழந்ததற்குப் பின்னால் அந்தச் சோகம் தாளாமல் மலர் மொட்டுப் போன்ற இருதயம் நாளுக்கு நாள் மரத்துக் கொண்டே வந்தது. இந்த இருவரின் வாழ்க்கையில் ஓரளவு இன்பம் இருக்கிறதென்றால் அது மாணிக்கம் தான். அந்த இன்பச் சுடரைத் தன் ஆத்திரத்தால் அணைத்துவிடத் தெரிந்தாள் கண்ணம்மா. அது சதா காலமும் அவள் உள்ளத்தை உறுத்திக் கொண்டே இருந்தது. இன்னும் உறுத்திக் கொண்டுதான் இருக்கிறது.

" என்ன இருந்தாலும் பெற்றவள் இவ்வளவு கொடூரமாகவா நடந்து கொள்வாள்! அப்படியானால் அவள் தாயல்ல, பேய்தான்!" என்று ஊராரின் வசை மொழி நூற்றுக்கு நூறு பங்கு மெய்தான் என்று கண்ணம்மாளின் மனத்திலே ஆழமாகப் பதிந்து விட்டது. அதற்கு எந்தவிதச் சமாதானமும் ஆறுதலளிக்க முடியாது என்று கண்ணம்மாள் திடமாக நம்பினாள்.

" ஏம்மா, இப்படிச் சடைந்து போய் நிற்கி



" இனிமேல் என்னதான் பிள்ளையின்மேல் அன்பைச் சொரிந்தாலும், உலகத்தின் கண்களுக்கு முன்னால் நான் ஒரு கொடியவள்தான். பெற்ற பிள்ளையை, பச்சைப் பாலகனைப் பழுக்கக் காய்ந்த இரும்புக் கோலால் சூடுபோட்ட வளல்லவா! அந்த வடுவை நான் மறந்தாலும்—மறக்க முடிந்தாலும் உலகம் எப்படி மறக்கும்!"

இமை கொட்டாமல் பிரமை பிடித்தவளைப் போல வெறும் சுவரை வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றாள் கண்ணம்மாள். அவள் கண்களின் இமை துனியில் துளிர்த்திருந்த கண்ணீர்த் துளிகள் அசைந்து பயங்கரமாக ஆடின.

மகளின் அரவத்தைக் காணவில்லையே என்று உள்ளே வந்த தாய்க் கிழவி தன் மகளின் நிலையைக் கண்டு சற்றுத் திடுக்கிட்டாள்.

" அடி பைத்தியமே! ஏன் இப்படிக் கண்ணீர் விடுகிறாய்! பிள்ளை படாத பாடு படுத்தினால் பெற்றவள் அடிக்க மாட்டாளா, என்ன! கோபத்தில்

இன்னும் உறுத்திக் கொண்டுதான் இருக்கிறது.

" என்ன இருந்தாலும் பெற்றவள் இவ்வளவு கொடூரமாகவா நடந்து கொள்வாள்! அப்படியானால் அவள் தாயல்ல, பேய்தான்!" என்று ஊராரின் வசை மொழி நூற்றுக்கு நூறு பங்கு மெய்தான் என்று கண்ணம்மாளின் மனத்திலே ஆழமாகப் பதிந்து விட்டது. அதற்கு எந்தவிதச் சமாதானமும் ஆறுதலளிக்க முடியாது என்று கண்ணம்மாள் திடமாக நம்பினாள்.

" ஏம்மா, இப்படிச் சடைந்து போய் நிற்கிறாய்! மாணிக்கம் இன்னும் கொஞ்ச நேரத்தில் பள்ளிக்கூடத்தி லிருந்து வந்து விடுவான். நான் சமையல் பண்ணுகிறேன். நீ இந்த அரிசியைக்கொஞ்சம் தீட்டிக் கொடுக்கிறியா!" என்று கூறிக் கொண்டே அரிசி வைத்திருந்த முறத்தை எடுத்துக் கண்ணம்மாளிடம் நீட்டினாள் கிழவி.

பேசாமல் முறத்தை வாங்கிக் கொண்டு முறத்தில் பதித்திருந்த உரலின் பக்கம் கண்



சின்னம்மாளுக்கு எந்த வேளையில் 'கண்ணம்மா' என்று பெயர் வைத்தார்களோ, தெரியாது. அவள் வாழ்க்கையின் ஒவ்வொரு சம்பவங்களும் அவள் கண்களுடன் நெருங்கிய தொடர்பைப் பெற்றன. கண்ணீர் விடுவதற்கென்றே பிறந்தவளைப் போலத் தோன்றினாள்.

ஆனால் கல்யாணமான புதிதில் ஊராரின் கண்களுக்கு ஒரு அபூர்வப் பிறவியாகத்தான் அவள் காட்சி யளித்தாள்.

"அவளுக்கென்ன, கொடுத்து வைத்த மகராசி! கண்ணுக்கு நிறைந்த புருஷன்; தேயிலைத் தோட்டத்திலிருந்து நோட்டு நோட்டாகக் கொடுத்து விடுகிறான்" என்று மனத்துள் குமைந்து கொண்டிருந்த பொறாமையை காருக்காக வெளியிடாத பெண்களே கிடையாது.

"கண்ணம்மாளா! மன்னார்சாமிக்கு வாழ்க்கைப் பட்டாலும் பட்டாள், இப்போது கண்கள் கூட அடைத்துப் போய்விட்டன! பதவிசு வந்து பந்தலில் நிற்கிறது அவளுக்கு!" என்று பகிரங்கமாகவே அவள் காதில் விழும்படி தங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்ட பெண்கள் எத்தனையோ பேர்!

இந்தப் பெண்களின் பொறாமைத் தீயோ அல்லது கண்ணம்மாளின் தலைவிதியின் திருவிளையாடலோ, திடீரென்று அவள் வாழ்க்கையில் கல்லைத் தூக்கிப் போட்டு விட்டது.

நீலகிரியில் தேயிலைத் தோட்டத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்த அவள் கணவன் மன்னார்சாமி மலேரியாக் காய்ச்சல் வந்து இறந்துவிட்ட





எஜமான்:—நீ முன்பு வேலையில் இருந்த இடத்திலிருந்து சர்டிபிகேட் வாங்கி வந்திருக்கிறாயா?

வேலைக்கு வந்தவன்:—இதோ, இந்தாருங்கள்!

எஜமான் (கடிதத்தைப் படித்தார்):—'கடிதம் கொண்டுவரும் ராமு எங்கள் கம்பெனியில் ஒரு மாதம் வேலை பார்த்து விட்டு விலகினார். எங்களுக்கு இதில் பரம திருப்தி!'

விடப் பன்மடங்கு வருத்தப் பட்டாள் அவனை வளர்க்கும்போது. பத்து வயதைத் தாண்டியும் தாய் சோற் றேனாத கழிப்பயலாக வளர்ந்து வந்தான் மாணிக்கம். நாள் தவறினாலும் அவன் மீது இரண்டு மூன்று பிராதுகளாவது வரத் தவறாது.

"வாத்தர் மரத்தில் கல்லை விட்டெறிந்து

பாவம்! தன் பிள்ளை கற்புத்திரனாகத் திகழ்வான் என்று அவள் கண்டு வந்த இன்பக் கனவுகளையும், இப்பொழுது அவள் நெஞ்சிலே நீறிக்கொண்டிருக்கும் துக்கத்தையும் அந்த வயதான கிழவி கண்டாளா, என்ன!

அன்று மாணிக்கத்தின் பிறந்த நாள். உலகத்தில் எந்தத் தாயும் தன் பிள்ளையைப் பற்றிப் பெருமைப் பட்டுப் பூரிப்படைய வேண்டிய நாள் தான். ஆனால் கண்ணம்மாளுக்கோ தன் பிள்ளையின் பிறந்த நாள் மிகுந்த வேதனையையும் பயங்கர நினைவுகளையும் கிளறுவதாக இருந்தது. காரணம் அது அவள் துன்பங்களுக்கெல்லாம் பிறந்த நாளாக இருந்ததுதான்!

"எங்கே கண்ணம்மா இந்தப் பயலைக் காணவில்லை; பள்ளிக்கூடம் அப்பொழுதே விட்டிருக்குமே! பிறந்த நாளும் அதுவுமாகக் கோயிலுக்கு அழைத்துக் கொண்டு போகச் சொல்லலாம் என்றிருந்தேனே!" என்றாள் கிழவி.

"ஆமாம்; பிறந்த நாள் கொண்டாடாதது ஒன்றுதான் பாக்கி! மூதேவி பள்ளிக்கூடம் விட்டதும் எங்காவது ஊர் சுற்றப் போயிருக்கும்" என்று அலட்சியமாகப் பதிலளித்தாள் கண்ணம்மாள்.

அவளது உதட்டிலிருந்துதான் மேற்கண்ட வார்த்தைகள் வெளிப்பட்டனவே தவிர, அவளது உள்ளம் "எங்கே போயிருப்பான்! இன்னும் காணவில்லையே!" என்று தேடித் தவித்தது.

தாய்க் கிழவி குழந்தையைக் காணாமல் வெளிப்படையாக அங்கலாய்த்தாள். ஆனால் கண்ணம்மா தன் பிள்ளையின் மேலுள்ள அன்பைக்கூட ஊர்ப் பெண்கள் முன்னிலையில் பகிரங்கமாகக் காட்டிக் கொள்ள வெட்கப்பட்டாள். கட்டிப் பிள்ளையை ஈன்றெடுத்த தாயல்லவா!

"அம்மா, நீ தம்பையா வாத்தியார் வீட்டிலே போய் இந்தப் பயல் வந்தானாவென்று கேட்டு விட்டு வா. அதற்குள் நான் கிருஷ்ணன் கோயில் கிணற்றிலிருந்து ஒரு குடம் தண்ணீர் கொண்டு வந்துவிடுகிறேன்" என்று சொல்லி விட்டுக் குடத்தை எடுத்துக் கொண்டு புறப்பட்டாள் கண்ணம்மாள். வழி நெடுக அவள் மனம் நிலை கொள்ளாமல் பலவாறாகக் குழம்பிக் கொண்டிருந்தது. வெறுங்குடம் செக்குப் போல் அவள் இடுப்பை அழுத்தியது!



டாக்டர்:—நீங்கள் யார்? உயிரையே பாதிக்கும் கேஸாயிருந்தாலொழிய யாரையும் உள்ளே அனுப்ப வேண்டாம் என்று வாசலில் சேவகனிடம் சொல்லியிருந்தேனே! நீங்கள் எப்படி......!

வந்தவர்:—...ஆமாம், ஸார்! இது உயிரையே பாதிக்கும் கேஸ்தான்! நான் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்ட்!

கோயிலுக்குள் அடி எடுத்து வைத்த கண்ணம்மாள் அப்படியே கல்லாகச் சமைந்து நின்று விட்டாள். கோயில் கொடி மரத்தைச் சுற்றிக் கூடியிருந்த கும்பலின் மத்தியில் மாலைக் கயிற்றினால் கைகள் இரண்டும் கட்டப் பெற்று மாலை மாலையாகக் கண்ணீரைச் சிந்திக்கொண்டு தேம்பியவாறு நின்று கொண்டிருந்தான் மாணிக்கம். அவன் காலடியில் பிஞ்சும் காயுமாக நிறைய மாதுளங்காய்கள் சிதறிக் கிடந்தன. அவனைக் கையும் மெய்யுமாகப் பிடித்த கோயில் அர்ச்சகர் ஏதோ அவனை உருக்கி உருக்கிப் பல கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தார்.

"ஐயோ!" என்று அலறிக்கொண்டு தன் பிள்ளையிடம் ஓடினாள் கண்ணம்மா. தாயைக் கண்டதும் மாணிக்கம் 'ஹோ' வென்று அழ ஆரம்பித்து விட்டான்.

"ஏம்மா! இப்படியா பூவும் பிஞ்சுமாகக் காயெல்லாம் பறிப்பான்! நல்ல பிள்ளை வளர்த்திருக்கிறாய் நீ! புத்தி வரட்டும் என்றுதான் இவ்வளவு நேரம் கட்டி வைத்திருந்தேன். இனிமேல் நீதான் அவனுக்குப் புத்தி சொல்ல வேண்டும்" என்று கூறிவிட்டுத் தாயை அணைத்தபடி நின்று கொண்டிருந்த மாணிக்கத்தின் கைகளை அவிழ்த்து விட்டார் அர்ச்சகர்.

"பார்த்தாயா! தன் பிள்ளை செய்த குற்றத்தை ஒப்புக் கொள்ள மாட்டேன் என்கிறாள். உலகத்தில் இல்லாத பிள்ளையைப் பெற்றிருக்கிறாள் அல்லவா! பிள்ளையா இது! பிசாசல்லவா!"—இது வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஒரு மகராசி மாணிக்கத்துக்கு அன்புடன் அளித்த பிறந்த நாள் ஆசீர்வாதம்!

கண்ணம்மாளுக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. தலை கிர்ரென்று சுற்றுவதைப் போலிருந்தது. ஏதோ ஆவேசம் வந்தவளைப் போல் மாணிக்கத்தை ஒரு கையால் பிடித்து இழுத்துக் கொண்டு வீட்டை நோக்கிப் புறப்பட்டாள்.

கண்ணம்மாளைப் பொறுத்தவரை அந்த நேரத்தில் பிள்ளையின் மேலுள்ள பாசம் அன்பு எல்லாம் வற்றி வறண்டு போயிருந்தது, அவள் இடுப்பிலிருந்த குடத்தைப் போல.

பேரனைக் காணாது வீட்டில் இதுவரை கவலையோடு இருந்த கிழவி, மாணிக்கம் அழுது கொண்டே வருவதைப் பார்த்தவுடன் ஓடிப் போய் வாரியணைத்துக் கொண்டாள்.

அடுத்த கணம் "ஐயோ! அம்மா!" என்று கதறினான் மாணிக்கம். படீர் படீரென்று தன் இரு கைகளினாலும் ஓங்கி மாணிக்கத்தின் முதுகிலே அறைந்தாள் கண்ணம்மா, வெறி கொண்டவளைப் போல. அந்த ஆவேசத்தில் அவனைப் பிடித்துத் தடுக்கப் போன கிழவிக்குக் கூட ஒன்றிரண்டு அடிகள் விழுந்து விட்டன.

"விடு, அந்தப் பயலை! இன்றைக்கு இரண்டிலொன்று பார்த்து விடுகிறேன். இப்பேர்ப்பட்ட பிள்ளை எனக்கு வேண்டவே வேண்டாம்" என்று இரைந்து கொண்டே அவன் மேல் பாயத் தொடங்கினாள் கண்ணம்மா. கிழவி கெட்டியாகப் பேரனை அணைத்துக் கொண்டு அடிவிழாமல் தடுத்து விட்டாள்.

கண்ணம்மாவின் சீற்றம் இன்னும் உச்சநிலையை அடைந்தது. "இதோ பார்! உனக்குப் பிறந்த நாள் பரிசு தருகிறேன்" என்று சொல்லி விட்டு விடுவிடுவென்று உள்ளே போனாள். எரியும் அடுப்பில் இரும்புக் கம்பியைப் பழுக்கக் காய வைத்து மாணிக்கத்தின் முதுகிலே வரிவரியாக இழுத்து விட்டாள்!

"ஏ சண்டாளி! குழந்தையைக் கொன்று விட்டாயே! உன் வெறியிலே இடி விழ!" என்று கூறினாள் கிழவி. மாணிக்கத்தின் கதறல் கேட்டு அக்கம் பக்கத்திலுள்ள ஜனங்கள் கூடிவிட்டனர்.

இரவு எட்டு மணி இருக்கும். வெறி தணிந்த கண்ணம்மா மெதுவாக உணர்வு பெற்றுப் புரண்டு படுத்தாள். அவள் கண்களினின்றும் கசிந்த நீர்ப் பெருக்கு தெப்பமாகப் படர்ந்தது.

மாணிக்கம் தீனக் குரலில் முனகும் சப்தம் அப்படியே அவள் இருதயத்தைக் கசக்கிப் பிழிந்தது. எதிர்ப்புறத்தில் மங்கிய விளக்கொளியில் குப்புறப் படுத்து முனகிக் கொண்டிருந்த மாணிக்கத்தின் தலைமாட்டில் வெதும்பிய உள்ளத்துடன் உட்கார்ந்திருந்தாள் கிழவி.

மனம் கேட்காமல் மெதுவாக எழுந்து போய் மாணிக்கத்தின் நெற்றியில் கையை வைத்தாள் கண்ணம்மாள். அவள் நெஞ்சு திக் திக் கென்று அடித்துக் கொண்டது.

மாணிக்கத்துக்கு ஜுரம்! அனலாகக் காய்ந்து கொண்டிருந்த ஜுர வேகம் அந்த இடம் முழுவதும் வெப்பத்தைப் பரப்பிக் கொண்டிருந்தது.

கண்ணம்மாளுக்கு மாணிக்கத்தின் முதுகிலே கொப்புளித்திருந்த தீப்புண்களைப் பார்த்ததும்



"அந்த மனிதருக்கும் உங்களுக்கும் ஏதாவது தகராறா? நீங்கள் அவருக்கு வந்தனம் தெரிவித்தும் பதிலுக்குத் திருப்பி வந்தனம் தெரிவிக்காமல் கூடப் போகிறாரே!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. அவர் என் பக்கத்து வீட்டுக்காரர். அவர் எதையும் எனக்கு இதுவரையில் திருப்பிக் கொடுத்தது கிடையாது!"

# "இது சுலபம்...

லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து அதிக அழகுடன் விளங்குங்கள்" என்று கூறுகிறார்

ராகினி



ராகினி கூறுவதாவது: "நான் வழக்கமாக லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து பெறும்






"நீங்கள்தான் கார் ஓட்டக் கற்றுக் கொண்டு விட்டீர் களே! வேகமாகப் போக முடியாவிட்டா லும் கொஞ்சம் மெது வாகத்தான் நீங்களே காரை எடுத்துக் கொண்டு போய் விட்டு வாருங்களேன்" என்று ஆலோசனை சொன்னாள் மங்களம்.

அவனுடைய பயங்கொள்ளிச் சுபாவம் அவன் மனைவியான அவளுக்குத் தெரியாதா, என்ன? ஆகவேதான் அப்படிச் சொன்னாள்.

சம்பந்தத்துக்கு ஒருபுறம் பயமாகத்தான் இருந்தது. இருந்தாலும், 'தனியாக நாம்தான் காரை எடுத்துப் போய்ப் பார்ப்போமே!' என்றும் தோன்றியது. 'சரி' யென்று சொல் லிக் காரை எடுத்துக்கொண்டு புறப்பட்டான்.

கார் வாங்கினதிலிருந்து சம்பந்தத்துக் கும் கார் ஓட்டக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று ஆசை. கார் வாங்கி வைத்துக்கொள்ள வகை யற்றிருப்பவர்களுக்கே கார் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று ஆசை ஏற்படும்பொழுது கையில் காரை வைத்துக் கொண்டிருப்பவனுக்கு அந்த ஆசை எழுவ தில் வியப்பில்லை அல்லவா? எனவே சம்பந் தம் அதற்கான பூர்வாங்க ஏற்பாடுகளைச் செய்து கொண்டு, கார் ஓட்டக் கற்றுக் கொள்ளத் தொடங்கினான். அவனுடைய டிரைவரும் அவன் முயற்சிக்குப் பக்கத் துணை யாக இருந்து உதவி புரிந்து வந்தான்.

கூச்சம் குறையவில்லையே ஒழியச் சம்பந்தம் சில தினங்களுக்குள்ளேயே ஒரு வகையாகக் கார் ஓட்டக் கற்றுக் கொண்டு விட்டான்.

அன்று ஒருநாள் காலை டிரைவர் தம் மகளுக்கு ஆண்டு நிறைவு என்று சொல்லி

சம்பந்தம் கொஞ்ச தூரம் சென்றதும், ஒரு வாலிபன் கை தட்டிக் காரை நிறுத்தச் சொன்னான். அவன் 'டிப் டாப்'பாக அணிந் திருந்த உடையைக் கண்ட சம்பந்தம் மனம் இரங்கிக் காரை நிறுத்தி, "என்ன விசே ஷம்?" என்று கேட்டான்.

"நான் அவசர ஜோலியாக இன்று வரை

அதற்குள் சைதாப்பேட்டை நாற்சந்தியில் போலீஸ் நிற்கும் இடம் வந்து விட்டது.

தன் நிலையை விளக்கிய வாலிபனுக்குச் சம்பந்தம் தன்னைப் போலீஸில் ஒப்படைத்து விட்டால் என்ன செய்வது என்று பயம் உண்டாயிற்றோ என்னவோ, தெரியவில்லை. சட்டென்று உரத்த குரலில், "ஸார் ! போலீஸில்..." என்று ஆரம்பித்தான்.

கண்களில் பூச்சி பறப்பது போன்ற அனுபவத்தில் சம்பந்தம் வலது புறம் போகிறோமா, இடது புறம் போகிறோமா என்று கூட யோசியாமல், காரை வெகு வேகமாக விடத் தொடங்கினான்.

அடுத்த கணம் போலீஸ்காரன் 'பிகிலை' எடுத்து ஊதி விட்டான். சம்பந்தத்துக்கு உயிரே போய் விட்டது. வண்டியை ஒரு ஓரமாகக் கொண்டு நிறுத்தினான். பிறகு, போலீஸ்காரன் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் "தவறுதான், தவறுதான்" என்று சொல்லி ஒப்புக் கொண்டான். போலீஸ்காரன் அவன் விலாசத்தை வாங்கிக்கொண்டு மறு நாள் கோர்ட்டில் ஆஜராகுமாறு சொல்லிக் காரை எடுக்கச் சொன்னான்.

சம்பந்தம் 'தப்பினோம், பிழைத்தோம்' என்று எண்ணிக் காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டான். கிண்டி வந்து விடவே, வாலிபன், "ஸார்! நான் இங்கேதான் இறங்க வேண்டும். சற்று நிறுத்திக் கொள்கிறீர்களா ?" என்றான்.

சம்பந்தம் தூக்கத்திலிருந்து விழித்தவன் போலக் காரை நிறுத்தினான். தன்னையும் தன் காரையும் இந்தத் திருடன் விட்டுவிட்டுப் போனால் போதும் என்று தோன்றிற்று அந்தச் சமயம் சம்பந்தத்துக்கு.

காரிலிருந்து இறங்கிய வாலிபன், "ஸார் ! இந்த உபகாரம் செய்த உங்களுக்கு என் நன்றி. இந்தாருங்கள், இதை வைத்துக் கொள்ளுங்கள் !" என்று சொல்லி ஒரு காகிதத்தைக் கொடுத்தான்.

அதை வாங்கிப் பார்த்த சம்பந்தத்துக்கு ஆச்சரியமாக இருந்தது. "இது போலீஸ்காரன் குறித்துக் கொண்ட காகிதமாயிற்றே! இது எப்படி ஸார், உங்களுக்குக் கிடைத்தது ?" என்று கேட்டான்.

"நீங்கள் செய்த உதவிக்கு நானும் ஏதாவது பிரதி செய்ய வேண்டும் என்று எண்ணினேன். எனவே, எனக்குத் தெரிந்த தொழிலைப் போலீஸ்காரனிடமும் உபயோகித்தேன்" என்றான் வாலிபன்.

"போலீஸ்காரனுக்குத் தெரியாமல் அவன் பையிலிருந்து எடுத்து விட்டீர்களா ?" என்று கேட்ட சம்பந்தம் ஒருமுறை தன் பையையும் தடவிப் பார்த்துக் கொண்டான்.

"ஸார் ! நான் அவ்வளவு நன்றி கெட்டவன் இல்லை. அதோடு நான் திருடனும் இல்லை. உங்களையும் உங்கள் சுபாவத்தையும் பற்றிப் பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அதைப் பரீட்சை செய்து பார்த்து விட எண்ணித்தான் நான் அப்படிச் சொன்னேன். ஆனாலும் நீங்கள் இத்தனை பயங்கொள்ளியாக இருக்கக் கூடாது ஸார் !" என்று உபதேசம் செய்தான் வாலிபன்.

"நீங்கள் திருடன் இல்லையென்றால் போலீஸ்காரனின் குறிப்புத்தான் உங்களிடம் எப்படி வந்தது ? என் மீது குற்றம் சாட்டி அவன் என் விலாசத்தை வாங்கிச் சென்றானே !" என்று கேட்டான் சம்பந்தம்.

"நீங்கள் கார் ஓட்டியதில் ஒரு விதத் தவறும் இல்லை. பின்னால் வந்த இன்னொரு வண்டிக்கு அவன் எச்சரிக்கை கொடுத்ததைப் பார்த்து நீங்கள் நிறுத்தி விட்டீர்கள். அவனைக் கேட்ட கேள்விக்கெல்லாம் நீங்களும் பதில் சொல்லவே, உங்கள் சுபாவத்தை அறிந்து கொண்ட அந்தப் போலீஸ்காரன் உங்களைப் பயமுறுத்தி வேடிக்கை பார்த்தான். அவன் எனக்குத் தெரிந்தவன். புறப்படும்பொழுது, 'இந்தமாதிரிப் பயந்தாங்கொள்ளி ஆசாமியை நான் பார்த்ததில்லை !' என்று கேலியாகக் கூறி இந்தக் குறிப்புத்தாளைக் கிழித்து என்னிடம் கொடுத்தான். பயத்தைக் குறைத்துக் கொள்ளப் பிரயத்தனம் செய்யுங்கள், ஸார் !" என்று சொல்லி விட்டு வாலிபன் தன் வழியே நடந்தான்.

சம்பந்தம் அவனையே பார்த்துக் கொண்டு நின்ற பின், "என்ன இருந்தாலும் நமக்கு இவ்வளவு பயம் கூடாதுதான் !" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு காரில் ஏறி உட்கார்ந்து தன்னுடைய காரியத்தைக் கவனிக்கப் புறப்பட்டான்.



"இந்தப் புடவையைக் கட்டிக் கொண்டால் நான் பத்து வயது சின்னவளாகத் தோன்றுகிறேனாம் ! என் கணவர் சொல்லுகிறார் !"

"அப்படியா ? ...... உங்களுக்கு என்ன வயது ?"

"இருபத்தெட்டு !"

"...... இல்லை. நான் உங்களுடைய உண்மை வயதைக் கேட்கிறேன் ! இந்தப் புடவையைக் கட்டிக் கொண்டால் தோன்றும் வயதைக் கேட்கவில்லை!"



பரிசுக் கதை: ரேஜினல்ட் கிப்பிங்ஸ்
(தென்னாப்பிரிக்கா)

மொழிபெயர்ப்பு: வாஞ்சி

தெக்வானின் குடிசை கிராமத்தை அடுத்துள்ள பள்ளத் தாக்கில் இருந்தது. குடிசையைச் சுற்றி அவனுடைய குழந்தைகள் குதூகலமாக ஓடியாடி விளையாடிக் கொண்டிருந்தன. மற்றொரு புறத்தில் கோழிகள் கொக்கரித்துக் கொண்டிருந்தன. வேறொரு புறத்தில் அவனது ஆடுகள் மும்முரமாக மேய்ந்து கொண்டிருந்தன.

ஆனால். இதெல்லாம் தெக்வானின் கவனத்தை இழுக்கவில்லை. அவன் தன் அருகில் சாதுவாக நின்று கொண்டிருந்த காளை மாட்டின் கழுத்தைத் தடவிக் கொடுத்த வண்ணம் இருந்தான். அந்த மாடும் அவனிடம் கொஞ்சுவது போல் அவன் தோளில் கழுத்தை வைத்துக் கொண்டிருந்தது.

மேற்படி மாட்டை 'தெக்வானின் செல்வக் குழந்தை' என்று சிலர் ஏளனம் செய்வது உண்டு. அவன் வயல்களைப் பார்க்கப் போகும் போது வெள்ளைக்காளையும் நாயைப் போல் அவனைப் பின்தொடர்ந்து செல்லும்.

தெக்வானின் குழந்தைகள் அந்த மாட்டின் மேல் ஏறி விளையாடுவது உண்டு. அவர்கள் அடிக்கும் கூத்தை யெல்லாம் சகித்துக் கொண்டு அது பேசாமல் இருக்கும். எனினும், அவர்கள் அதன் கண்ணையோ, மூக்கையோ தொட்டு விஷமம் செய்தால் மாத்திரம் அத்தகைய சந்தர்ப்பங்களில் அது தன் உடலை உதறிக் கொள்ளும். உடனே அதன்மேல் ஏறியிருந்த குழந்தைகள் தொப்பென்று கீழே விழுவார்கள். அப்போதெல்லாம் அவர்கள் மேற்கொண்டு அதனிடம் விஷமம் செய்யாமல் சிரித்துக் கொண்டே அங்கிருந்து ஓடி விடுவார்கள்.

சிற்சில சமயங்களில் தெக்வான், குடிசைக்கு அப்பால் உள்ள சமவெளியில் உட்கார்ந்து கொண்டிருப்பான். அப்போது வெள்ளைக் காளை அவனுக்குப் பக்கத்தில் வந்து நிம்மதியாகப் படுத்துக் கொள்ளும்; கண்களை மூடிய வண்ணம் சுகமாக அசை போட்டுக் கொண்டிருக்கும்.

அச்சமயம் அந்த மாட்டுடன் அவன் பேசுவான். உண்மையில் தெக்வான் அதனுடன் பேசினாலும் பேசா விட்டாலும், ஊர் ஜனங்கள் அவன் மாட்டுடன் அந்தரங்கமாய்ப் பேசுவதாகக் கூறினார்கள்.

அவன் பயிர்களின் நிலைபற்றித் தன் அருமைக் காளையிடம் கூறுவான். மழை வருமா, வராதா என்று அதைக் கேட்பான். அவன் தானாக இரைந்து பேசுவதை, அவன் மாட்டுடன் பேசுவதாகப் பேதைகளான சில ஜனங்கள் எண்ணிக் கொண்டனர்.

சிற்சில சமயங்களில் தெக்வான் பாடவும் தொடங்கி விடுவான். அவனது பாட்டு அவனுடைய ஹிருதயத்தில் எழும் வேதனையையோ அல்லது குதூகலத்தையோ பிரதிபலிப்பதாக இருக்கும்.

அக்கிராம வாசிகளில் பலருக்கும் மேற்படி காட்சிகள் எல்லாம் வேடிக்கையாகத் தோன்றின. அவற்றைக் குறித்துப் பலர் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். அந்த மாடு எப்போதும் தெக்வானைத் தொடர்ந்து செல்வதில் ஏதோ மர்மம் இருக்க வேண்டும் என்று சிலர் கூறினர். தெக்வான் ஒரு மந்திரவாதி என்றும், மாடு அவனது மந்திரத்தினால் சிருஷ்

# மாயக்காளை




டிக்கப்பட்ட பேய் என்று கூடச் சொல்வதற்குச் சிலர் தயங்கவில்லை!

* * *

எனினும் மேற்படி வதந்திகளை யெல்லாம் தெக்வான் இலட்சியம் செய்வதில்லை. ஜனங்கள் ஏளனம் செய்கிறார்கள் என்பதற்காக அவன் காளையைக் கொஞ்சுவதையோ, அதனுடன் உரக்கப் பேசுவதையோ நிறுத்தவில்லை.

எல்லோரும் தன் ஹிருதய தாபங்களை வெளிக்குக் காட்டாமல் மறைக்க முயற்சிப்பார்கள். ஆனால், தெக்வான் அவற்றை மறைக்க முயற்சிப்பதில்லை.

குமுறி யெழும் மன வேதனையைச் சுவரிடமாவது சொல்லித் தீர்க்க வேண்டும் என்று கூறுவார்கள் அல்லவா? தெக்வான் உயிரற்ற சுவரிடம் சொல்லுவதைக் காட்டிலும், உயிருள்ள மாட்டினிடம் சொல்லுவது மேல் என்று கருதினான் போலும்!

ஒருநாள் தெக்வான் வெள்ளைக் காளையைக் குளிப்பாட்டும்போது, அவன் அதன் காதுக்கு அருகில் தேய்த்துக் கொண்டிருந்தான். அப்போது அவன் தானாக ஏதோ பேசிக்கொண்டிருந்ததைப் பார்த்த



சில பாமரர்கள், அதைக் குறித்து விபரீத வியாக்கியானம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். காளையிடம் அவன் ஏதோ இரகசியமாகக் கூறுவதாக எண்ணி விட்டார்கள்.

மேற்படி வதந்தி காட்டுத் தீபோல் ஊர் முழுவதும் பரவத் தொடங்கியது. சில விஷமிகள் அதை ஒன்றுக்குப் பத்தாகக் கயிறு திரிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

ஊரில் பிசாசுகளின் நடமாட்டம் அதிகமாக இருக்கிறது; சிலரைப் பிசாசுகள் ஆட்கொண்டிருக்கின்றன; அதெல்லாவற்றுக்கும் காரணம் தெக்வானும் அவனது மாயக் காளையும் தான் என்றெல்லாம் கூறி, பாமர ஜனங்கள் நம்பும்படி செய்து விட்டார்கள்.

மேற்படி வதந்தி எழுந்ததிலிருந்து கிராம ஜனங்கள் தெக்வானையும் அவனது குடும்பத்தினரையும் பகிஷ்காரம் செய்யலாயினர். இதெல்லாம் தெக்வானுக்கு ஒருபுறம் வேடிக்கையாகவும் மற்றொரு புறம் வேதனையாகவும் இருந்தது. சாதுவான வாயில்லா ஜீவ

னுடன் மலைப் பிராந்தியங்களில் ஆடு மேய்த்துக் கொண்டு விளையாடியவர்கள்.

ஒருநாள் அவர்கள் பரஸ்பரம் ஒன்று சேர்ந்து பேசிக்கொண்டு தெக்வானின் குடிசைக்கு வந்து சேர்ந்தார்கள்.

தெக்வான் விவசாயத்தில் மிகுந்த கெட்டிக்காரன். மற்றவர்களுடைய வயல்களைக் காட்டிலும் தெக்வானின் வயல்கள் அதிகமாக விளையும். அப்படியிருந்தும் அவனுக்குச் சிறிதும் கர்வம் கிடையாது. எல்லோருடனும் அன்புடன் பேசுவான். யாருக்கும் தொந்தரவு கொடுக்க மாட்டான். யாராவது சண்டைக்கு இழுத்தாலும் சமாதானமாக ஒதுங்கி விடுவான். எனவே, அவனைக் கிராம ஜனங்கள் பகிஷ்கரித்தது அவனது நண்பர்களுக்கு வருத்தத்தைக் கொடுத்தது. ஆகையால், தெக்வானின் மனத்தை மாற்றி, அவன் கிராம ஜனங்களின் அபிப்பிராயத்துக்கு இணங்கும்படி செய்வதற்காக மேற்படி நண்பர்கள் தெக்வானின் குடிசைக்கு வந்

உடனே மற்றவர்களும் அதுதான் சமயம் என்று தங்கள் தங்கள் மனத்தில் இருப்பதைக் கூறத் தொடங்கினார்கள்.

"காளை நன்றாகத்தான் இருக்கிறது. எனினும் இவ்வளவு சுத்த வெண்மையான காளையை வைத்துக் கொள்வதால் குடும்பத்துக்குத் தீங்கு நேரும். இறந்தவர்களின் ஆவி வெள்ளைக் காளை உருவத்தில்தான் வருமாம்" என்றார் மற்றொருவர்.

"இவ்வளவு நல்ல காளையை நீ ஏன் யாதொரு வேலையுமின்றித் தீனி போட்டு வைத்துக் கொண்டிருக்கிறாய்? கொழுத்துள்ள இந்த மாட்டுக்கு வெள்ளையர்கள் அதிகத் தொகை கொடுப்பார்களே. அந்தத் தொகையைக் கொண்டு நீ கன்றுக் குட்டிகளுடன் இரண்டு மூன்று பசுமாடுகளை வாங்கலாமே. பசுமாடுகள் பால் கொடுக்கின்றன. இந்தக் காளையினால் என்ன பலன்?"

இதைக் கேட்டதும் தெக்வானுக்குக் கோபம் உண்டாயிற்று.

"இந்த

"என் மனத்தில் எழும் சிந்தனைகளை நான் உரக்கக் கூறுகிறேன். நான் சந்திரனுடன் பேசுவது உண்டு. நட்சத்திரங்களுடன் பேசுவது உண்டு. இயற்கை அழகு நிறைந்த இந்தப் பள்ளத்தாக்குடன் பேசுவது உண்டு. இதையெல்லாம் குறித்து நீ என்ன நினைப்பாய்? என்னை ஒரு பைத்தியக்காரன் என்று எண்ணுவாய். ஆனால், என் எதிரில் ஒன்றும் சொல்லமாட்டாய். அப்பால் சென்று எனக்குத் தெரியாமல் என்னைப் பரிகாசம் பண்ணுவாய்; புறம் கூறுவாய். ஆனால் இந்த மாடோ நான் கூறுவதை யெல்லாம் கேட்டுக்கொள்கிறது. ஆனால் உங்களைப் போல் இந்த மாடு என்னைப் பரிகாசம் செய்யாது; புறம் கூறாது. என்னைப் பற்றிப் பொய் வதந்திகளையும் கற்பனைக் கதைகளையும் கிளப்பாது."

இவ்வாறு சரமாரியாகக் கூறிய தெக்வானைப் பார்த்து அவனது நண்பர்கள் பகிரங்கமாகப் பரிகாசம் செய்யத் தொடங்கினர்.

"தெக்வான்! பைத்தியக் காரத்தனமான

மாக வெளிக் கிளப்புவதுகூட இல்லை. வயது வந்த தெக்வானின் பிள்ளைகள் அவமானம் தாங்க முடியாமல், நகரப் புறத்துக்குச் சென்று விட்டார்கள். தெக்வானின் குழந்தை களைக் கூட ஊர் ஜனங்கள் அடியோடு வெறுத்து விரட்டலாயினர்.

*　　　*　　　*

அச் சந்தர்ப்பத்தில், சொல்லி வைத்தாற் போல் மேற்படி கிராமப் பிராந்தியங்களில் மழை பெய்யவில்லை. அதன் விளைவாகப் பயிர்கள் காய்ந்து பஞ்சம் உண்டாகியது. அதனல் கிராம ஜனங்கள் சொல்லொணுக் கஷ்டத்துக்கு உள்ளாயினர். நாய்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று, ஆடுகளையும் கன்றுக் குட்டிகளையும் கொல்லத் தொடங்கின. பிணியினுலும் பஞ்சத்தினுலும் ஜனங்க ளிடையே உயிர்ச்சேதமும் ஏற்படலாயிற்று. காய் கறிகளும், கோழிகளும் பூச்சிகளால் தாக்கப் பட்டு அழிந்தன.

அக்கிராமத்தில் [illegible] செய்தாலோ, அத்தனை ஜனங்களும் ஆவேசம் கொண்டு அவன்மீது பாய்ந்திருப்பார்கள். ஆனல் அதற்கு மாருக, தெக்வானின் சாந்த மான பேச்சு ஜனக் கூட்டத்தைச் சிறிது பின் வாங்கும்படி செய்தது.

"நீங்கள் கோபித்துக் கொள்ளாதீர்கள். நிதானமாக யோசித்துப் பாருங்கள். சிற்சில சமயங்களில் மனிதர்களாகிய நம்மைத்தான் பலவிதமான பிசாசுகள் பிடித்துக் கொள் கின்றன. என் வெள்ளைக் காளையைப்போன்ற சாதுவான வாயில்லா ஜீவன்களைப் பிசாசுகள் எக்காலத்திலும் பிடிப்ப தில்லை. அந்த ஜீவன்கள் இரத்த வெறி கொள்வதில்லை" என்ருன் தெக்வான்.

அச்சமயம் ஓர் இளைஞன் ஒரு கல்லை எடுத்து, தெக்வான் மீது வீசி எறிந்தான். அந்தக் கல் தெக்வானின் நெற்றியில் பட்டு விட்டதால், உதிரம் பெருகத் தொடங்கியது.

தெக்வான் 'ஹா' என்று அலறி விட்டான். அந்த உதிரத்தைக் கண்டதும் கூட்டத்தில்



# உறுதியான தேகதிடம்

## நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்



ஆரோக்யமளிக்கும் தன்மை நிரூபணமான இந்த டானிக்கைச் சாப்பிட்டுப் பாருங்கள். போஜனம் பூர்த்தியாவது மின்றி போஷாக்கும் பெறுவீர். உங்கள் தினசரி வேலைகளையும் தேகாப்யாசங்களையும் சரிவரச் செய்யபுதிய சக்தியும் உறுதியான தேகதிடமும் பெறுக. களைப்பே தோன்றாதபடி உங்கள் உறுப்புகள் வலுவடைவதற்கு அவசியமான போஷாக்கு கிடைக்கும்.

வளரும் குழந்தைகளுக்கு ருசி மிகுந்த வாட்டர் பரீஸ் காம்பவுண்ட் மிகவும் உதவிகரமானது. இருமல், சளி ஏற்படாதவாறு எதிர்ப்பு சக்தி உண்டாக்கும்.

# WATERBURY'S

## COMPOUND

வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களைத் தெம்புடன் வைத்திருக்கும்




NAS 763



# பாவம் குருசாமி!

துரோணன்

**பி**ளாட்பாரத்தின் கோடியிலிருந்த படியே 'கார்டு' விசிலடித்துக் கொண்டு பச்சைக் கொடியை விசிறினர். அடுத்த கணம்—விழுப்புரம் எக்ஸ்பிரஸ் பெருமுழக்கத்துடன் நகர ஆரம்பித்தது. வெளிப்புறத்துக் கடையில் சோடா அருந்திக் கொண்டிருந்த குருசாமி பாதியிலேயே அதை வைத்து விட்டு ஓட்டமாக ஓடி வந்து ஒரு படியில் ஏறிக் கொண்டான். என்ஜினும் ஒரு தரம் நீண்ட பெருமூச்சை விடுத்துக் கொண்டே பிசாசுபோல் ஓடவாரம்பித்தது!

கதவைத் திறந்து கொண்டு உட்புறம் வந்து சேர்ந்த குருசாமி சாவதானமாகப் பெருமூச்சுடன் பலகையில் உட்கார்ந்தான்.

சிந்தனையுடன் போர் தொடுத்தது. தனக்குத் தெரிந்த உற்றார், உறவினர், பெரிய மனிதர்கள்—முதலிய எல்லோரையும் தன் கண் முன் உருவகப் படுத்திப் பார்த்தான் குருசாமி. ஒன்றும் அவன் ஞாபக சக்திக்கே எட்டவில்லை. ஆனல், 'இவரை எங்கே பார்த்திருக்கிறோம்?' என்ற கேள்வியைத் தொடங்கி அவனது மனம் துழாவிக் கொண்டிருந்தது.

**சு**மார் நாற்பத்தைந்து வயது மதிக்கக் கூடிய அந்தக் கனவான் பார்வை

ஒளிமட்டில் சந்தேகமான கேள்வியை எழுப்பிக் கொண்டிருந்தது. அதையும் அவர் புரிந்து கொண்டு தானிருந்தார். இருந்தாலும் அதை அவர் காட்டிக் கொள்ளாமலே, "தஞ்சை ஜில்லாவுக்குள்ளேயே தானே இப்பொழுதும் உத்தியோகம்?" என்றார் மீண்டும். குருசாமி இதற்கும் தலையசைத்தான். அந்த விடாக்கண்டர் தொடர்ந்து, "என்ன, அம்மா, அப்பா இருவரும் சௌக்கியம்தானே?" என்று கேட்கும்போது அவன் உள்ளத்தில் அவரைப் பற்றியறியும் ஆத்திரம் மேலிட்டது. அந்தப் பொல்லாத மனிதர் தாம் யாரென்பதற்கான அடையாளமாவது சூசகமாகத் தெரிவித்தால்தானே? 'நீங்கள் யார்?' என்று கேட்டு விடவும் அவனது பாழும் மனம் இடந்தரவில்லை.

நல்ல வேளையாக, குருசாமியின் பொறுமையை அதிகமாகச் சோதிக்காமல் சில நிமிஷங்களுக்குள்ளாகவே அந்த மனிதரைப் பற்றிப் புரிய வைத்து விட்டார் கடவுள்!



"ஏதோ கடவுள் செயல்! பணம் காசு இன்றைக்கு வரும்; நாளைக்குப் போகும். மனிதன் கொடுத்தா மனிதனுக்கு விடிந்து

குருசாமி இதற்கும் தலையசைத்தான். அந்த விடாக்கண்டர் தொடர்ந்து, "என்ன, அம்மா, அப்பா இருவரும் சௌக்கியம்தானே?" என்று கேட்கும்போது அவன் உள்ளத்தில் அவரைப் பற்றியறியும் ஆத்திரம் மேலிட்டது. அந்தப் பொல்லாத மனிதர் தாம் யாரென்பதற்கான அடையாளமாவது சூசகமாகத் தெரிவித்தால்தானே? 'நீங்கள் யார்?' என்று கேட்டு விடவும் அவனது பாழும் மனம் இடந்தரவில்லை.

நல்ல வேளையாக, குருசாமியின் பொறுமையை அதிகமாகச் சோதிக்காமல் சில நிமிஷங்களுக்குள்ளாகவே அந்த மனிதரைப் பற்றிப் புரிய வைத்து விட்டார் கடவுள்!

"ஏதோ கடவுள் செயல்! பணம் காசு இன்றைக்கு வரும்; நாளைக்குப் போகும். மனிதன் கொடுத்தா மனிதனுக்கு விடிந்து



விடுகிறது? இரண்டாயிரம் ரூபாயைக் காப்பாற்றுவதற்கு மனிதன் எவ்வளவோ பந்தோபஸ்து செய்கிறான்; அவ்வளவையும் மீறி ஏதாவதொரு வழியில் சில நாளிலோ, ஏன்-சில மணியிலோ கூட அது மறைந்துதான் விடுகிறது" — இப்படிச் சுற்றி வளைத்து அக் கனவான் கூறிய வுடனே

சிறுகச் சிறுக வாழ்ந்து தன் ஒரே பெண்ணைக் கலியாணம் செய்து கொடுப்பதற்காக இரண்டாயிரம் ரூபாயை மடியில் கட்டிக் கொண்டு ஊர் ஊராக அலைந்தார் ஏழையான சங்கரய்யர். பலநாள் முயற்சிக்குப் பின் குருசாமியைப் பற்றிய வரலாறுகள் அவருக்குக் கிடைத்தன. அவனது படிப்பு, உத்தியோகம், வயது, குடும்பம் முதலிய எல்லா பரிசீலனைகளுக்குப் பின்னர் சம்பிரதாயமான பெண் பார்க்கும் படலமும் நடந்தது. எளிமை நிறைந்த இடத்தில்தானே, கடவுள் எழிலை வைப்பது வழக்கம்! குருசாமியும், அவனது பெற்றோரும் கற்பனை செய்திருந்தபடியே, அவருடைய பெண்ணும் 'கிளி'யாகத்தானிருந்தாள். இருந்தாலும் பேராசை விடுகிறதா? விள்ளாமல் இரண்டாயிரம் ரூபாயைத் தங்கள் கையில் கொடுத்து விட வேண்டுமென்று குருசாமியும், அவனது பெற்றோரும் நிபந்தனை யிடும்போது ஏழையான சங்கரய்யரால் எப்படித் தீர்க்க முடியும்? இந்த ஒரே கட்டுப்பாட்டினால் நாலைந்து முறைகளுக்கு மேல் ஊர் தேடி, வீடு தேடிப் படையெடுத்த சங்கரய்யரின் முயற்சி தோல்வியுற்றது.

குக் கிடைத்தன. அவனது படிப்பு, உத்தியோகம், வயது, குடும்பம் முதலிய எல்லா பரிசீலனைகளுக்குப் பின்னர் சம்பிரதாயமான பெண் பார்க்கும் படலமும் நடந்தது. எளிமை நிறைந்த இடத்தில்தானே, கடவுள் எழிலை வைப்பது வழக்கம்! குருசாமியும், அவனது பெற்றோரும் கற்பனை செய்திருந்தபடியே, அவருடைய பெண்ணும் 'கிளி'யாகத்தானிருந்தாள். இருந்தாலும் பேராசை விடுகிறதா? விள்ளாமல் இரண்டாயிரம் ரூபாயைத் தங்கள் கையில் கொடுத்து விட வேண்டுமென்று குருசாமியும், அவனது பெற்றோரும் நிபந்தனை யிடும்போது ஏழையான சங்கரய்யரால் எப்படித் தீர்க்க முடியும்? இந்த ஒரே கட்டுப்பாட்டினால் நாலைந்து முறைகளுக்கு மேல் ஊர் தேடி, வீடு தேடிப் படையெடுத்த சங்கரய்யரின் முயற்சி தோல்வியுற்றது.

இதெல்லாம் பழைய சம்பவங்களாகி விட்டன. தற்போதுள்ள சங்கரய்யரின் தோற்றமே வேறாகி விட்டது. அவருடைய யோக க்ஷேமங்கள் பற்றிக் கேட்க வேண்டுமென்று குருசாமிக்கு ஒரு புறத்தில் ஆவல்தான். இருந்தாலும், சுய கௌரவம் வந்து குறுக்கிட்டுக் கொள்

ஒரு வழியாக, மாலை ஐந்து மணி சுமாருக்கு எழும்பூர் ஸ்டேஷனில் வண்டி நின்றது. குருசாமியும் கீழிறங்கி வண்டியின் முன்புறத்தை நோக்கி நடந்தான். அப்பொழுது தான் எதிர்பாராத அந்தச் சம்பவமும் ஏற்பட்டது! மறுநாள் காலை தான் சந்திக்க விருந்த அதே சுப்பிரண்டு துரை அப்பொழுதே அவன் முன்னால் நின்று கொண்டிருந்தார். அவனைச் சந்தித்த போது அவருக்கும் கூடக் கொஞ்சம் வியப்பாகத் தானிருந்தது. ஆனால் அவர் சாதாரண மிடுக்குடன், "என்னய்யா! நீர் நாளைக்கல்லவா வருவீரென்று நினைத்தேன்; நானும் எதிர் பாராதபடி தான் இப்பொழுது வரும்படி நேரிட்டது. என் சம்ஸாரம் இந்த வண்டியில் வருவதாகத் திடீரென்று இன்று மத்தியானம் தந்தி கிடைத்தது; அதுதான் வந்தேன்—" என்றார்.

அவன் எதிர்ப்பார்த்து மிரண்டிருந்த படியில்லாமல், அவரது குரலில் ஏதோ ஒரு 'குஷி' யிருந்ததாகக் குருசாமிக்குத் தோன்றிற்று! அவன் பரபரப்புடன், "என்ன, இதே வண்டியிலா? எனக்காவது தெரிவித்திருக்கக் கூடாதா ஸார்?—" என்றான் உரிமையை வெளியாக்கிக் கொண்டே.



"அட, அது எப்படிங் காணும் எனக்குத் தெரியும்? இன்னும் இரண்டு தினங்கள் கழித்துத்தான் எதிர் பார்த்தேன்? இன்று மத்தியானம் தானே எனக்குத் தந்தி கிடைத்தது—!" என்று கூறிக் கொண்டே துரை சுற்று முற்றும் ஒரு தரம் நோக்கினார். பின்னர் அவனை நோக்கித் தனிவான குரலுடன், "சரி, போகட்டும், உம்மைப் பற்றிய சில புகார்களைக் கூட விசாரித்து, பேப்பரைப் 'பைசல்' செய்ய வேண்டும். ஆனால், முக்கியமாக உம்மை அதற்காகக் கூட உத்தரவிடவில்லை; என் சொந்தச் சமாசாரம் ஒன்று—" என்று முடிவு கூறாமல் நிறுத்திக் கொண்டே. அவன் முகத்தைக் கூர்ந்துநோக்கினார் துரை. அப்பொழுது அவரது விழிகளில் குழைவு நிறைந்திருந்தது.

குருசாமிக்கு அவனது நிலைமையில்— இத்தகைய வாய்ப்பு கிடைக்கக் கூடியதா? அடுத்த கணம், அவன் ஆர்வத்துடன் அவர் முகம் நோக்கினான்.

"ஒன்றுமில்லை, இந்த ஸ்டேஷன் சமீபமாகப் பூட்டிக் கிடக்கும் வீடு உம்முடையது என்று கேள்விப் பட்டேன். அது என்ன சேதி?" என்றார். குருசாமி தலையசைத்தான்.

"அப்படியானால் அது எனக்குக் கிடைக்குமென்று சொல்லும்!" என்றார் துரை மகிழ்ச்சி மிகுதியான குரலுடன்.

"அதற்கென்ன, இப்பொழுதே ஏற்பாடு செய்து விடுகிறேன். சாவிகூடத் தற்செயலாகக் கொண்டு வந்திருக்கிறேன்" என்றான் குருசாமி உரத்த குரலுடன்.

"வெரிகுட்மேன்! என்ன வாடகையானாலும் உம் 'பெற்றோர்களு'க்கு அனுப்பிவிடுகிறேன். நீர் எழுதும்......" சுப்பிரண்டு துரை இப்படிக் கூறிக்கொண்டேயிருக்கையில் மூன்று போர்ட்டர்கள் சுமக்க முடியாத எடுபிடிகளுடன் அவரெதிரே வந்து நின்றார்கள். அவரைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்த கனவானை முகமலர்ச்சியுடன் கைகூப்பிய வண்ணம் வரவேற்றார் துரை.

"என்ன மாப்பிள்ளை, இன்றைக்கு ஒரு நாள்தான் நான் நன்றாக இருக்கிறது. அதனால் தான் குழந்தையை அழைத்துக் கொண்டு உடனே கிளம்பி விட்டேன். அதோ — முதல் வகுப்புப் பெட்டியிலிருந்து இறங்கி என் சம்ஸாரத்தோடு வருகிறாள் — ஹி ஹி ஹி!" என்றார் வந்தப் பெரிய மனிதர்.

குருசாமி திடுக்கிட்டு அவரை நோக்கினான். அவன் இதயம் ஒரு நிமிஷத்துக்குள் எவ்வளவோ ஆயிரம் மைல் வேகத்துடன் முழக்கமிட ஆரம்பித்தது. பரபரப்புடன் அவன் திரும்பவும்— அவனது இதயம் நொறுங்கி உதிர்ந்தது.

தன்னுடைய ஆதரவுக்காகத் தவம் கிடந்து கெஞ்சிய அதே 'கிளி'— தனக்கும் மேலான சுப்பிரண்டு துரையின் உரிமைப் பொருளாகி அவரை நோக்கி அன்ன நடையுடன் வந்து கொண்டிருந்தது!

அந்த நிமிஷமே, எதிரேயிருந்த சங்கரய்யர்— சுப்பிரண்டு துரை — தான்—எழும்பூர் ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரம் எல்லாம் ஒரேயடியாகச் சுழன்று கொண்டிருப்பது போல் குருசாமியின் கண்களுக்குத் தோன்றியது.

* * *

தன் உணர்ச்சி பெற்ற குருசாமி, தனக்கு எதிரில் வீட்டுச் சாவிக்காக நின்றுகொண்டிருந்த சுப்பிரண்டைப் பார்த்தான். அவன் மனம் ஒரு கணம் துணுக்குற்றது. எத்தனை நாழி இப்படி இருந்துவிட்டோமோ தெரியவில்லையே என்று பயந்து போனான்.

"...ம் மன்னிக்கணும்...ஏதோ நினைவாக" என்று சுப்பிரண்டிடம் மன்னிப்புக் கேட்கும் பாவனையாகச் சாவியை நீட்டினான். "அதனால் பாதகமில்லை. நீ ஒன்றுக்கும் கவலைப்பட வேண்டாம்" என்று சொல்லிய வண்ணம் அவனிடமிருந்து சாவியை வாங்கிக் கொண்டார் சுப்பிரண்டு. பாவம் குருசாமி!

# பிரச்னை தீர்ந்தது!





விஜய்

வில்லை. வல்லின, இடையின பேதமின்றி, தம் மனைவி செய்த இலக்கணப் பிழையை நினைத்து அவருக்குச் சிரிப்பு வந்தது. மெதுவாக மலர்ந்த சிரிப்பு பெரிதாகி, வெடித்தது. சிறிது நேரம் சிரித்தார். ஒரு ஹாஸ்ய எண்ணம் உதயமாயிற்று.

"வாழ்க்கை என்பது உப்பு, புளி, வெந்தயம் தான். மனிதன் நினைத்த மாத்திரத்தில் இவை யெல்லாம் கிடைக்க ஒரு மந்திரம் இருக்கவேண்டும். அவள் ஒரு படி உப்பு வேண்டுமென்பாள். நான் இந்த மந்திரத்தை உச்சரித்தவுடன், வீடு முழுவதும் ஒரே உப்பு!

'ஹா, ஹா, ஹோ, ஹோ!' என்று சிரித்தார் நாதன். இந்தக் கற்பனை அவருக்குச் சிறிது நேரம் சாந்தியை அளித்தது.

"ஹலோ!" — பள்ளிக் குமாஸ்தா ரொசாரியோவின் குரல் கேட்டது, "என்ன நாதன்! காப்பி சாப்பிடலாம் வாருங்கள்!"

நாதன் எழுந்தார். மௌனமாக ரொசாரியோவைப் பின்பற்றினார்.

"என்னவோ நீங்களாகவே சிரித்துக்கொண்டிருந்தீர்களே!" என்று கேட்டார் ரொசாரியோ.

"ஒன்றுமில்லை...இன்று வீட்டுச் சாமான்களுக்காக என் மனை ஒரு ஜாபிதா போட்டுக் கொடுத்தாள். ஜாபிதாவின்படி சாமான் வாங்கக் குறைந்தது இருபது லக்ஷரூபாய் தேவையாக இருக்கும் போல இருக்கிறது!" என்றார் நாதன்.

ரொசாரியோ மெல்ல சிரித்தார். பிறகு, "மிஸ்டர், நாதன்! மாதக் கணக்கில் பொருள்களை வாங்கி விடுங்களேன்!" என்றார்.

சிறிது நேரம் கழித்து, நாதன் சமையலறையில் எட்டிப் பார்த்தார். குழந்தைக்குப் பாலைப் புகட்டிக் கொண்டிருந்தாள் அவள். அடுப்பில் உலை நீர் கொதித்துக் கொண்டிருந்தது.

"என்ன கொதிக்கிறது! அரிசி ஏது!"

"அரைப்படி இருந்தது. உங்களுக்கு என்று எடுத்து வைத்திருந்தேன்."

முகத்தை அவர் கடுமையாக வைத்துக் கொண்டாலும், மனம் அவளை வாழ்த்தத்தான் செய்தது.

சாப்பிட்டு விட்டுக் கிளம்பும்பொழுது, அவள் ஒரு ஜாபிதாவை நீட்டினாள். "நேற்று ஒரு ஜாபிதா கொடுத்தேனே......" என்று தொடங்கினாள். "அது எங்கேயோ காணோம்!" என்று பதிலளித்தார் நாதன்.

ஜாபிதா அவருடைய பையில்தான் இருந்தது!

* * *

காப்பியை எதிரே வைத்து விட்டுச் சென்றார் சப்ளையர். காப்பியின் மணம் மூக்கைத் துளைத்தது. "என்ன நாதன், இன்றைக்கு ஏதோ புது சினிமாவாம். காப்பி சாப்பிட்டு விட்டுப் போவோமா!" என்று கேட்டார் ரொசாரியோ.

"என் கையில் காலணாகூட இல்லை. அத்துடன் என் மனைவி கொடுத்த மளிகைக் கடை ஜாபிதா வேறு இருக்கிறது. நான் சினிமாவுக்கு வரவில்லை" என்றார் நாதன்.

"அப்படியானால் இந்தாருங்கள். பள்ளிச் சாவி. நீங்கள் டியூஷன் முடிந்து போகும்பொழுது பியூனிடம் கொடுத்து விடுங்கள். நான் இங்கிருந்து நேராகச் சினிமாவுக்குப் போகிறேன்" என்றார் ரொசாரியோ.

மௌனமாகப் பள்ளியை நோக்கி நடந்தார் நாதன். அவர் அன்று ஒரு பையனிடம் டியூஷன் பணத்தை வாங்கிக் கொண்டு வரச் சொல்லியிருந்தார். அந்தப் பையனைப் பார்த்து முடிவை அறிவதில் தீவிரமாக இருந்தது அவருடைய மனம்.

அவருடைய வகுப்பறையின் அருகில், அந்தப் பையன் நின்றான். அவன் என்ன சொல்லப் போகிறானோ!—நிச்சயம் பணம் கொண்டு வந்திருப்பான். அவன் பத்து ரூபாய் கொடுக்க வேண்டும். அதில் ஐந்து ரூபாயாவது,—அட, அதுகூட வேண்டாம், ஒரு ரூபாய்......

பையனை அவர் பார்த்தவுடனே, அருகில்

"தெரியும், ஸார்!"

"இந்தா!"—ஒரு காகிதத்தில் அவசரமாகத் தன் தேவையை எழுதினார். "இதைக் கொண்டு போய்க் கொடுத்து விட்டு, ஒரு ரூபாயாவது அவசியம் வாங்கிக்கொண்டு வரச் சொன்னார் என்று சொல். தெரிந்ததா! அந்தப் பையன் வருவதற்குள் வந்துவிடு. வெறும் கையை வீசிக் கொண்டு வராதே"—தன் ஆயுளையே அவனிடம் ஒப்புவித்த பாணியில் பேசினார் நாதன்.

புத்தகப் பையை அங்கேயே வைத்து விட்டு, வாத்தியார் எழுதிக் கொடுத்த காகிதத்துடன் பையன் பறந்தான். அவன் சென்ற திசையையே ஆவலுடன் பார்த்துக் கொண்டு நின்றார் நாதன்.

பையன் திரும்பும்வரை அவருக்கு நேரம் பாரமாக இருந்தது. பையனுடைய தலை தெரிந்தது. அவன் குடல் தெறிக்க ஓடி வந்து கொண்டிருந்தான். மறுபடியும் எண்ணங்கள் ஒன்றையொன்று மோதித் தள்ளின.

"என்ன தம்பி!"

"ஸார், ராமராவ் வீட்டிலே இல்லை, ஸார்."

பையனுடைய கையில் அவர் எழுதிக் கொடுத்த காகிதம் இருந்தது! அது கசங்கிப் பையனின் வியர்வைப் பிடியில் சுருங்கி இருந்தது!

இதற்குள் மற்றப் பையனும் வந்தான்.

நாதன் தனது வகுப்பு அறையைத் திறந்தார். தன்னுடைய மேஜை, நாற்காலி, கரும்பலகை, காலியாக இருந்த பெஞ்சுகள்...இவற்றின் கோலம் அவரைக் கோபத்திற் காளாக்கியது. "சீ! என்ன வாழ்க்கை!—" என்று முணு முணுத்தார்.

டியூஷன் சொல்லிக் கொடுக்க மனம் ஒரு நிலையில் நின்றால் தானே!



"தம்பி, ராமராவ் வந்து விட்டாரா, என்று பார்த்து வருகிறாயா!" என்று கேட்டார்.

"எப்போ விடுதலை அடைவோம்!" என்று காத்துக் கொண்டிருந்த மாதிரி, "சரி, சார்" என்றான் பையன். ராமராவுக்கு எழுதிய காங்கிய கடிதத்தை மறுபடியும் அவனிடம் கொடுத்தார். "அவர் இல்லையென்றால், எப்பொழுது வருவார் என்று கேட்டுக்கொள். அவர் இன்னும் சிறிது நேரத்தில் வந்து விடுவார் என்று சொன்னார்களென்றால், சிறிது நேரம் காத்திரு" என்று தெளிவான உத்தரவுகள் கொடுத்துப் பையனை அனுப்பினார். இரண்டாவது பையன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

"சார், நானும் போகட்டுமா?"

"வேண்டாம், உட்காரு. கணக்கெல்லாம் போட்டாச்சா, நீ!" என்று, நேரத்தை மறப்பதற்காகக் கணக்குப் போடக் கிளம்பினார். ராமராவ் பதில் வரும் வரை காத்திருக்க வேண்டுமே!

போன பையன் மறுபடியும் சீக்கிரமாகவே திரும்பி விட்டான். "ஸார், என்னமோ பதில் எழுதிக் கொடுத்திருக்கிறார், ஸார்!" என்று இரைத்துக்கொண்டு.

"மன்னிக்க வேண்டும்" என்ற ஒரே வரி, ராமராவின் கையெழுத்தில் எழுதப்பட்டிருந்தது. இந்த வரி நாதனை நோக்கிச் சிரித்தது.

'என்ன, ஒரு ரூபாய் கூடவா இல்லை! விரும்பியிருந்தால் கொடுத்திருக்கலாம்! சீ! நம் தலை விதி! தலை விதியாவது! மனிதர்களின் சுயநலம்—என்ன யோசனை செய்து என்ன; ரூபாய் கிடைக்கவில்லை.'

நாதனின் யோசனை குழம்பி நின்றது.

"சரி, நீங்கள் போகலாம்."

அன்றைய டியூஷன் அவ்வளவுதான். ஒரு மணி நேரப் படிப்பு முக்கால் மணியில் முடிந்தது.

வகுப்பு அறையைப் பூட்டிக் கொண்டு, பள்ளி மைதானத்தை நோக்கி நடந்தார் நாதன். பியூன் சவரிமுத்து மண்ணைச் சமப்படுத்திக் கொண்டிருந்தான்.

"இந்தா, சாவி, ரைட்டர் வந்தவுடன் கொடுத்து விடு" என்று சாவியை எறிந்து விட்டுத்திரும்பினார்.

"சாமி......"

"என்ன!"

"டீக்கு ஒரு அணா கொடுத்தீங்கன்னா......" என்று இழுத்தான் அவன்.

தன்னிடம் இருந்த ஒரே அணாவை எடுத்து அவனிடம் கொடுத்தார் நாதன்.

அவன் அவரைக் குனிந்து வணங்கினான்.

அவர் யோசனை செய்தார். 'அவன் என்னைக் கும்பிடுகிறான், ஒரு அணாவுக்காக!—நான் கடவுளைக் கும்பிடுகிறேன். இகபர செல்வ சுகங்களுக்காக!—பணம்தான் கடவுள்! கடவுளென்று தனியாக ஒருவர் இருக்கிறாரா, என்ன!'

"இன்றைக்குச் சாமான் வாங்கக் கையில் ஒரு ரூபாயைக் காணோம். பி. ஏ. புஸ்தகங்கள் வேறு வாங்க வேண்டுமே!" என்று கவலையில் நாதன் இயந்திரம்போல் நடந்து கொண்டிருந்தார்.

"நாதன்!"

நாதன் நிமிர்ந்து பார்த்தார். எதிரே அப்பொழுதுதான் உலாவச் சென்று திரும்பிக்கொண்டிருந்த பாதிரியார் நின்று கொண்டிருந்தார். பாதிரியார் பள்ளியின் தலைமை ஆசிரியர். நாதனின் குடும்பத் தலைவர்.

"என்ன, நாதன்! இவ்வளவு சீக்கிரமாக இன்றைக்கு டியூஷன் முடிந்து விட்டதா, என்ன!" என்று அவர் கருணையுடன் கேட்டார்.



ஓட்டல் முதலாளி:—ஏண்டாப்பா சர்வர், நம் கடையில் இருக்கும் பக்ஷணங்களெல்லாவற்றையும் ஒருவருக்கும் தெரியாமல் தின்று வருகிறாயாமே வாஸ்தவமா? என்ன முழிக்கறே. நான் முதலாளிதானே. என்றைக்காவது நான் தின்று பார்த்திருக்கிறாயா?

சர்வர்:—இல்லீங்க!

முதலாளி:—ஏன் தின்னவில்லை?

சர்வர்:—அஜீரணம் வந்துவிடும்!

---

"ஆம்" என்று தலை குனிந்தவாறே பதில் சொன்னார் நாதன்.

"சற்று என் அறைக்கு வருகிறாயா! ஒரு சின்ன சங்கதி!" என்றார் பாதிரியார். "உனக்கொன்றும் வேலையில்லையே!"

"தற்போதைக்கு ஒன்றுமில்லை."

"அப்படியானால் சரி; வா, போவோம்."

**நா**தன் பயபக்தியுடன் தொடர்ந்தார். பாதிரி ஏதேதோ பள்ளி விஷயங்களைப் பற்றிப் பேசினார். பிறகு, "உனக்கு 'டைப்' அடிக்கத் தெரியுமல்லவா! நான் ஒரு விசேஷப் பிரசங்கம் ஏற்பாடு செய்திருக்கிறேன். அதைத் தெளிவாக 'டைப்' செய்தால்தான் அச்சிட முடியும். இதற்காக உன்னைத் தனியாகக் கவனித்துக் கொள்கிறேன்."

நாதன் டைப் அடிக்கத் தொடங்கினார்.

"இரு, இரு, டீ சாப்பிடலாம்" என்று பாதிரியார் முகமலர்ச்சியுடன் சொன்னார்.

சமையற்காரன் டீ, பிஸ்கோத்து, என்னென்னவோ கொண்டு வந்தான்.

"இந்தா, குழந்தைக்குக் கொடு" என்று ஒரு பை நிறைய இனிப்புப் பண்டங்களை மேஜை மேல் வைத்துவிட்டு, பாதிரியார் தியானத்திற்குப் போய் விட்டார்.

நாதனால் பேசவே முடியவில்லை. நாத் தழுதழுத்தது. சிறிது நேரத்திற்கு முன்னால் பணமே கடவுள் என்றவர், அன்பே கடவுள் என்று தன் கொள்கையை மாற்றிக் கொண்டார்.

தியானத்தை முடித்துக்கொண்டு பாதிரியார் ஜபமாலையைத் தடவிய வண்ணம் வெளியே வந்தார். அவருடைய முகம் ஜொலிப்பதுபோல நாதனுக்குத் தோன்றியது.

"டைப் செய்வதற்கு நிறைய விஷயங்கள் இருக்கின்றனவே, நீ வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டு வரவேண்டுமா! அல்லது என்னுடன் சாப்பிடுகிறாயா!"

"உங்களிஷ்டம்" என்று பணிவாகப் பதிலளித்தார் நாதன். வீட்டில் மௌனமாக அவர் வரவை நோக்கி, வெறும் வயிற்றுடன் உட்கார்ந்திருக்

ளும் அவருடைய மனைவியின் தோற்றம் அவருடைய மனக் கண்முன் தோன்றி அவரை வதைத்தது. கையில் ஒரு காசில்லாமல், வெறும் பையுடன் வீட்டில் எப்படி நுழைவது!

பாதிரியார் ஏதோ ஒரு மதப் புத்தகத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கினார்.

* * *

எதிர்பாராத சந்தர்ப்பங்கள் சில வாழ்க்கையின் திருப்பக் கோணங்களாக அமைகின்றன.

டைப் அடித்து முடிக்கும் பொழுது, நாதன் அறையிலிருந்த பெரிய கடியாரத்தைப் பார்த்தார். மணி ஒன்பதரை.

"இன்று வீட்டில் சரியான ரகளை நடக்கும். பணமும் கிடைக்கவில்லை. நேரமும் ஆகிவிட்டது!" என்று எண்ணிக் கொண்டே டைப்ரைட்டரை மூடினார் நாதன்.

சோபாவில் சாய்ந்தபடி வாசித்துக் கொண்டிருந்த பாதிரியார் "சரி, நீ போகலாம்!" என்றார்.

தயங்கியபடி நின்றார் நாதன்.

பாதிரியார் நாதனை உற்றுக் கவனித்தார். நாதனின் கண்களில் ஏமாற்றம் நீரைத் தருவிக்க முயன்று கொண்டிருந்தது.

"உன்னுடைய கஷ்டம் என்ன! சொல் என்னிடம்!" என்று பாதிரியார் அன்புடன் கேட்டார்.

அவ்வளவுதான்!

கடல் மடை திறந்தாற்போல, நாதன் தன் கஷ்டங்களை யெல்லாம் பாதிரியாரிடம் ஒப்புவித்து விட்டார்.

அவருடைய சரிதையைக் கேட்கக் கேட்க, பாதிரியார், "ஓ! இவ்வளவு தூரம் கஷ்டப்படுகிறாய் என்று எனக்குத் தெரியவே தெரியாது. முன்னரே என்னிடம் ஒரு வார்த்தையாவது சொல்லியிருக்கக் கூடாதா" என்று அவரை அன்புடன் கடிந்து கொண்டார்.

"சரி, வா!" பாதிரியாரின் பிரத்தியேக அறைக்குள் இருவரும் போனார்கள்.

"இந்தா,"—பாதிரியார் கையில் நூறு ரூபாய் நோட்டு ஒன்று இருந்தது. "இதை மாதா மாதம், உனக்குச் சிரமமில்லாமல், எவ்வளவு தீர்க்க முடியுமோ, அவ்வளவு கொடு. நீ 'டைப்' அடிக்கும் தனி விஷயங்களுக்காக மாதம் இருபது ரூபாய் உனக்குக் கொடுக்கிறேன்!"

கருணையே! நீ இன்னும் மறைந்து விடவில்லை. எதிர்பாராத இடங்களில், நேரங்களில் நீ தோன்றுகிறாய்! நீ இருப்பதால்தான் மழை பெய்கிறது!

நாதன் அப்படியே பாதிரியாருக்கு வணங்கினார்.

* * *

பை நிறையச் சாமானுடன் திரும்பிய நாதனைக் கண்டதும் ஆச்சரிய மடைந்தாள் அவள்.

"ஏன் இவ்வளவு நேரம்! பணம் கிடைத்து விட்டதாக்கும்!" என்றாள்.

எதிர்பாராத விதமாக, உலவி விட்டுத் திரும்பிய பாதிரியாரைச் சந்தித்தது முதல் நடந்தவற்றை நாதன் விவரமாகச் சொன்னார். "என். பி. ஏ. பரீட்சைக்குரிய சகல செலவுகளையும் அவர் ஏற்றுக் கொள்வதாகச் சொல்லி யிருக்கிறார்" என்று நாதன் பெருமையுடன் சொல்லிக்கொண்டு அவள் முகத்தைப் பார்த்தார். அது ஆதரவுடன் கனிந்து அவரை நோக்கிப் பிரகாசித்தது.

நாதனுடைய குடும்பப் பிரச்னை தீர்ந்தது!



பிப்ரவரி 8-ம் தேதியன்று குடந்தையில் அன்னதான சிவன் ஞாபகார்த்த சங்கம், கஸ்தூரிபா மாதர் சங்கம் சார்பில் "தமிழ்த் தாத்தா" டாக்டர். உ. வே. சுவாமிநாதய்யர் தினமும் மாதர் சங்கம் ஆண்டு விழாவும் நடைபெற்றது. குடந்தை நகராட்சித் தலைவர் திரு வி. எஸ். குஞ்சிதபாதம் செட்டியார் "சுவாமிநாதய்யர் புத்தகாலய"த்தைத் திறந்து வைத்தார். சகோதரி ஆர். எஸ். சுப்புலெக்ஷ்மி எம். எல். ஸி., திரு டி. எம். பாஸ்கரத் தொண்டைமான், திரு டி. எம். வெள்ளைவாரணம் முதலியோர் டாக்டர் சுவாமிநாதய்யர் அவர்களின் தமிழ்ப் பணிகளைச் சிறப்பித்துக் கூறினர்.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 52. நௌளி செய்யும் விதம்

சாதாரணமாய் நிற்கவும். முதல் சித்திரத்தி லுள்ளபடி சிறிது முன் பக்கம் குனிந்து, கைகளைச் சேர்த்துத் தொடையின் சந்தில் வைத்துக் கொள்ள வும். வயிற்றைத் தளர்த்தவும். மூச்சைப் பூரண மாய் வெளியில் விட்டு வயிற்றை உள்ளுக்கிழுத்து எக்கவும். இப்பொழுது உட்டியாணா நிலை வரும். இப்படி எக்கினவுடன் வயிற்றின் மத்தியில் நெருக்கி இறுக்கவும். இப்படிச் செய்தால் முதல் சித்திரத்திலுள்ளபடி மத்தியில் சதைக் கூட்டம் திரண்டு தடிபோல் வந்து அதன் இரண்டு பக்கங் களிலும் பள்ளமாய் இருக்கும். இந்த நிலைமையில் ஐந்து முதல் பத்து எண்ணும் வரை இருந்து, பின் வயிற்றைத் தளர்த்தி நிதானமாய் மூச்சை இழுத் துக் கொண்டே சாதாரண நிலைக்கு வரவும். இம் மாதிரி அவரவர்களுக்கு வேண்டிய அளவு மூன்றி லிருந்து ஆறு தடவைகள் வரை செய்யலாம். ஒவ் வொரு தடவைக்கும் இடையில் நன்றாய் நிமிர்ந்து நின்று இரண்டு மூன்று தடவை மூச்சைச் சாதா ரணமாய் விடவும் இழுக்கவும் செய்யலாம். இதற்கு மத்திய நௌளி என்று பெயர்.

இந்த நௌளியைக் கால்களைச் சிறிது அகலமாக வைத்தும், கைகளைத் தொடையின் மேல் வைத்தும் செய்வதுண்டு. ஆரம்ப சாதகர்கள் தொடையின் சந்தில் கைகளை வைத்துச் செய்தால் இன்னும் சீக்கிரமாக வரும். இப்படிச் செய்யும்போது முழங்கைகளால் வயிற்றில் இரண்டு பக்கங்களி லும் சிறிது அழுத்தினாற் போல் செய்து, நடுவில் சதை திரளச் செய்யலாம். இவை யெல்லாம் ஆரம்ப சாதகர்களுக்குத்தான். சரியாய்ச் செய்ய வந்த பின் முழங்கைகளால் வயிற்றை அழுத்த வேண்டிய அவசியமில்லை. நௌளி செய்யும் முறையை எத்தனை தரம் படித்தாலும், செய்யப் போனால், படித்தமாதிரி உடனே செய்ய வந்து விடாது. சிறிது சிறிதாக நமது ஆட்சியை வயிற்று உறுப்புக்களின் மேல் செலுத்தி, நமது ஆணைக்கு, ஆட்சிக்குக் கட்டுப்படுத்த வேண்டும். அதற்குச் சில நாட்கள், சில மாதங்களா வது ஆகும். நௌளியில் பல விதம் உண்டு. அவைகளுக்கு நௌளியா கிரியா என்று பெயர். அவைகளில் வாம நௌளி, தக்ஷிண நௌளி என் பவை முக்கியமானவை. உட் டியாணாவும், மத்திய நௌளி யும், செய்ய வந்தபின் இதைச் செய்ய வேண்டும் அப் பொழுதுதான் நமது இஷ்டப் படி வயிற்றுத் தசைகளை எல்லாத் திசைகளிலும் ஆட் டிச் செய்ய முடியும்.



நௌளி (சித்திரம்—1)

வாம நௌளி, தக்ஷிண நௌளி: காலைச் சற்று அகல மாக வைத்து நிற்கவும். முன் பக்கம் சிறிது குனிந்து இடது தொடையின் மேல் கையை நன்கு அழுத்தினால் இடது பக்கச் சதைக் கூட்டம் ஒதுங்கி இரண் டாவது சித்திர நிலைக்கு வரும். இதற்கு வாம நௌளி யென்று பெயர். இதைப் போலவே, வலது தொடையின்மேல் பளுவைப் போட்டு வலது கையினால் அழுத்தினால் வலது பக்கம் இருக்கும் தசைக் கூட்டம் இடது பக்கம் ஒதுங்கும். இதை மூன்றாவது சித்திரத்தில் கவ னிக்கவும். இதற்குத் தக்ஷிண நௌளி யென்று பெயர். இதையே மாற்றி மாற்றி வலது பக்கத்தி லிருந்து இடது பக்கத்திற்கும் இடது பக்கத்தி லிருந்து வலது பக்கத்திற்கும் செய்ய வேண்டும். இவைகளெல்லாம் செய்யும் வரை மூச்சு வெளி விட்டவாறே இருக்க வேண்டும். எத்தனை தட வைகள் அப்பக்கம் இப்பக்கம் ஒதுங்கிச் செய்ய முடியுமோ அத்தனை தடவைகள் செய்யலாம். குறைந்தது மூன்று தடவையும் அதிகம் பன் னிரண்டு தடவைகள் வரை ஒரே மூச்சில் செய்ய லாம். இப்படிச் செய்யும்போது அதற்கு இசைந் தாற்போல் கைகளை மாற்றி மாற்றித் தொடையில் அழுத்திக் கொள்ள வேண்டும். இதையே வேக மாகவும் செய்யலாம்.

ஆரம்ப சாதகர்கள் முதலில் இடுப்பையும் சிறிது அதற்குத் தகுந்தாற்போல் வளைத்துக் கொடுத் தால் சுலபமாய்ச் செய்ய வரும். வாம நௌளி செய்யும்போது இடது கை அழுத்தும் சமயம் சிறிது இடது பக்கம் இடுப்பை வளைத்துக் கொண் டால் இடது பக்க வயிறு தளர்ச்சி அடைந்து காற்று அழுக்கத்தால் உட்சென்று வலது பக்கம் சதை திரளும். அதைப் போலவே தக்ஷிண நௌளி செய்யும்போது வலது பக்கம் சிறிது இடுப்பை வளைத்துச் செய்தால் வலது பக்கம் தளர்ச்சி பெற்றுக் காற்று அழுக்கம் ஏற்பட்டு இடது பக்கம் சதை திரளும். வாம, தக்ஷிண நௌளிகள் சரியாய்ச் செய்ய வந்தபின் இடுப்பை வளைத்துச் சிரமப்பட வேண் டிய அவசியமில்லை.

மற்றொரு விதமாகவும் ஆரம்ப சாதகர்கள் இதைப் பயிலலாம். காலை அகலமாக வைக்காமல் கிட்ட வைத்து முதலில் சொன்னபடி நௌளியை உண்டாக்கி முழங் கைகளை வயிற்றில் அழுத்தி இறுக்குவது போல் செய்தால் நௌளி உண்டாகும். வாம நௌளிக்கு இடது முழங் கையைச் சற்று வயிற்றில் அழுத்தினால் இடது பக்கம் சதை ஒதுங்கும். அதைப் போலவே வயிற்றின் வலது பக்கம் முழங்கையை அழுத் தினால் வலது பக்கம் சதை ஒதுங்கும். சிலருக்கு இவை களெல்லாம் முதலில் செய்து

பார்த்ததும் உடனே வந்து விடாது. விடாமுயற்சியுடன் தினமும் விடாமல் சில நாட்கள் செய்து வந்தால் வரும்.

அத்துடன் மேல்வரும் நௌலிக் கிரியைகளையும் செய்யலாம். நௌலிக் கிரியா: அலைகளைப் போல வயிற்றுச் சதைகளை அடி வயிற்றிலிருந்து மேல் வயிற்றுக்கும், மேல் வயிற்றிலிருந்து அடி வயிற்றுக்கும் படிப்படியாய் மடித்தாற் போல் செய்யவேண்டும். இதில் மூச்சை, சௌகரியப்படி விடவும் இழுக்கவும் செய்யலாம். இதையே வேகமாகவும் செய்யலாம். இப்படி ஆரம்பத்தில் செய்தால் பின் மத்திய நௌலியும், வாம, தக்ஷிண நௌலிகளும் சுலபமாகவும் சுத்தமாகவும் செய்ய வரும்.



வாமநௌலி (சித்திரம்—2)

இவைகளெல்லாம் சரியாய்ச் செய்ய வந்த பின்பு மத்திய நௌலி செய்து, அதையே மத்து போல் வலமாகவும் இடமாகவும் திருப்ப வேண்டும். இதுவும் ஒருவித நௌலி கிரியாவைச் சேர்ந்ததே. இவைகளெல்லாம் என்னதான் படித்துச் செய்தாலும் ஒரு சிலருக்குத் தவிர மற்றவர்களுக்கு வருவது கஷ்டம். இவைகளைச் செய்யும்போது நேரில் பார்த்தால் ஒருவிதமாய் மனத்தில் பதியும். ஆனால் செய்யப்போனால் உடனே சரியாய் வராது. இதை எப்படிச் செய்வது என்று கேட்டாலும் மேலே எழுதியபடி தான் சொல்லமுடியுமே தவிரத் திட்டமாய்ச் சொல்வதும் சிரமமே. செய்யச் செய்யத்தான் வயிற்று உறுப்புக்கள் வசப்படும். இவைகள் வசப்பட்ட பின் நாம் நினைத்தபடி திருப்பவோ தள்ளவோ இழுக்கவோ வரும்.

இந்தப் பயிற்சிகளைச் செய்பவர்கள் அதிகக் கொழுப்பை உண்டாக்கக் கூடிய ஆகாரங்களை அதிகம் சாப்பிடக் கூடாது. வயிற்றில் கொழுப்பு கரைந்தால் தான் சரிவர ஆசனங்களைச் செய்ய முடியும்.

வயிற்றில் ஆப்பரேஷன் செய்து கொண்டவர்கள், ஹெர்னியாவுடையவர்கள், வயிற்றுப் புண் உள்ளவர்கள், இருதய பலவீனமானவர்கள், இரத்த அழுக்கமுள்ளவர்கள் இந்த ஆசனத்தைச் செய்யக் கூடாது. இருதய பலவீனமுள்ளவர்களும் மற்ற ஆசன பிராணாயாம, உணவுச் சிகிச்சைகளால் குணமாக்கிக் கொண்டு, பிறகு இவைகளைப் பயிலலாம்.



தக்ஷிண நௌலி (சித்திரம்—3)

சிறுவர்கள் இதைச் செய்யக்கூடாது. இம் மாதிரி வயிற்றை ஆட்டுவதை அவர்கள் கண்டால் அவர்களுக்கும் அம்மாதிரி செய்ய வேண்டுமென்று தோன்றும். செய்தும் பார்ப்பார்கள். ஆகையால் அவர்களை இம்மாதிரி உட்டியாணா, நௌலி, நௌலிக்கிரியாக்களைச் செய்யக் கூடாது என்று எச்சரித்து வைக்கவேண்டும். பதினான்கு வயதுக்கு மேற்பட்ட ஆண் பெண் சகலரும் செய்யலாம். கர்ப்ப ஸ்திரீகள் இதைச் செய்யக் கூடாது.

**பலன்கள்:—** இதன் பலன் மிக உன்னதமானது. வயிற்றைச் சேர்ந்தமுதுகெலும்பின் பாகம், அதைச் சார்ந்த தசைகள், நரம்புக் கூட்டங்கள் முதலியனவெல்லாம் புத்துயிர் அடைகின்றன. இந்திரியப் பை, தாது வலுவடைகின்றன. இவைகள் நமது இச்சா சக்திக்கு அடங்கி நடக்கும்; ஆண்மை பெருகும்; வலுவடையும்; வாலிபம் ஸ்திரப்படும். வியாதிகள் என்னும் பிடியிலிருந்தே விலக்கு ஏற்படும். சோம்பல் என்பதே ஓடிவிடும். அஜீரணம், தலைநோய், நரம்பு பலவீனம், ரத்த சோகை, மூலம், வாய் துர் நாற்றம், வாய்வு, குடல் வாய்வு, காஸ்டிக் தொந்தரவு முதலியன விலகும். ஆஸ்துமா, க்ஷயம் முதலியவைகளுக்கு மிகச் சிறந்தது. என்றைக்கும் பேதி மருந்து சாப்பிட வேண்டிய அவசியமேயில்லை. மலச் சிக்கலே ஏற்படாது. முகத்தில் ஆரோக்கியரேகை சுடர் விட்டு ஒளி வீசிப் படரும்.

* * *

ஆரோக்கிய ரகசியம் என்ற தலைப்பில் இதுவரையில் வெளி வந்த யோகாசனக் கட்டுரைகளை வாசக நேயர்கள் உற்சாகமாகப் படித்து அடிக்கடி கடிதங்கள் எழுதித் தங்கள் சந்தேகங்களைக் கேட்டுக் கொண்டு வந்தனர்.

இன்னமும் சிலர் ஏற்கெனவே நான் எழுதிய விஷயங்களைப் பற்றியே திரும்பத் திரும்ப எழுதி பிறர் கேட்ட அதே சந்தேகங்களைக் கேட்டு வருகின்றனர். அவர்களுக்கெல்லாம் நான் தனித்தனியே மறுபடியும் அந்த பதில்களை எழுத முடியாமைக்கு மிகவும் வருந்துகிறேன். எனவே. நேயர்கள் தயவுசெய்து பழைய 'கல்கி' இதழ்களைத் தேடிப் பிடித்துப் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டுகிறேன். (தொடரும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

Regd. No. M. 4392
*Registered as a newspaper in Ceylon*



கொண்டிருந்தான். . .

. . . ஆனல், இப்பொழுது



சிரிக்கவே அச்சப்படுகிறான்!